22nd April 1960] [Sri R. Swaminatha Merkondar]

இதனால் சிறிய நிலச் சொந்தக்காரர்கள் ரொம்ப பாதிக்கப்பட்டு குழப்பத்தில் ரொம்ப பயங்கரமான நிலையில் இருக்கிறார்கள் என்பதை நான் தெரிவித்துக்கொண்டு, அவர்களுக்கு வேண்டிய நன்மை அளிக்கும்படியாகக் கேட்டுக்கொண்டு, என்னுடைய உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

* THE HON. SRI M. A. MANICKAVELU: The seasonal conditions this year in Tanjore district were on the whole satisfactory except in portions of Arantangi, Orathanad and Tanjore taluks where on account of insufficient supply to minor irrigation tanks, the ayacut lands had either been left fallow or the crops raised on them had withered. Hundred and twenty-five villages in Arantangi taluk, six villages in Orathanad taluk and seventeen villages in Tanjore taluk have been affected. The wet assessment for the ayacut lands is proposed to be remitted. Collection of kist has been suspended in respect of seventeen villages in Tanjore taluk. Even in these affected areas, on account of the early good rains in the fasli, dry crops have been successfully raised and harvested. There is no necessity for the remission of dry assessment. In the C.M.P. area of these taluks, the crops of this year have yielded more than the normal returns.

At the end of March 1960, there was an arrear of more than 46 lakhs of rupees outstanding in this district under Loans including the demands for the current fasli of which more than 18 lakhs represent the arrear balance. These arrears represent the accumulated amounts in fasli 1362. As for the arrears under inam assessment, the Act takes effect from fasli 1366 and the notified assessment has to be collected from that fasli onwards. Land revenue collection in the district has been intensified and a special drive has been instituted as the arrears which have accumulated so far are very heavy. The loan arrears in Pattukkottai, Aranthangi, Orathanad and Tanjore taluks being heavy, further delay in the collection will result only in further accumulation of arrears leading to a situation when the ryots will not be in a position to clear off their dues. Due consideration is given to individual cases in the affected areas, after proper assessment on merit of each case. In all other cases where the defaulters are in a position to clear off the arrears, they have either to make payment or in their default to do so the Government have to take necessary steps by resorting to permissible coercive action for collecting arrears.

There has been no harassment of any kind to warrant a panicky situation. The seasonal conditions do not justify general remission or postponement of loan collections in the four taluks. But individual cases warranting remission will receive due attention.

## III.—VOTING ON DEMANDS FOR GRANTS FOR THE YEAR 1960-61.

(1) DEMAND XXVI—CIVIL WORKS—WORKS.

(2) DEMAND XXVII—CIVIL WORKS—ESTABLISHMENT AND TOOLS AND PLANTS.

(3) DEMAND XLI—CAPITAL OUTLAY ON CIVIL WORKS.

(4) DEMAND XXVIII—CIVIL WORKS—GRANTS-IN-AID.

MR. SPEAKER: We will now take up the Demands for Grants for the year 1960–61. We have got four Demands namely, XXVI—Civil Works—Works XXVI—Civil Works—Establishment and Tools

[Mr. Speaker] [22nd April 1960

and Plants and Demand XLI—Capital Outlay on Civil Works which belong to the domain of the Hon. Minister Sri Kakkan. Demand XXVIII—Civil Works—Grants-in-Aid belongs to the domain of the Hon. Srimathi Lourdhammal Simon.

Shall we allot two hours for the Demands to be moved by the Hon. Minister Sri Kakkan and two hours for the Demand to be moved by the Hon. Minister Srimathi Lourdhammal Simon? Is that agreed to or would the hon. Members like to discuss all the Demands at one stretch and give half an hour to each Hon. Minister to reply to the discussion? It is for the hon. Members to decide. I think two hours for the Demands to be moved by each Hon. Minister will be a fair division.

Sri A. GOVINDASAMY: தலைவர் அவர்களே, எல்லாவற்றையும் ஒட்டு மொத்தமாகவே டிஸ்கஷன் வைத்துக்கொள்ளலாம். அங்கத்தினர்கள் இரண்டு அமைச்சர்களுடைய டிமாண்டுகளின் மேலும் கலந்து பேசலாம். அது அவர்களுக்கு சௌகர்யமாக இருக்கும். பிறகு இரண்டு அமைச்சர்களும் ஒவ்வொருவராகப் பதில் சொல்லலாம்.

Mr. SPEAKER: அது சரியாக இருக்காது. ஒவ்வொரு டிமாண்டையும் பற்றி அங்கத்தினர்கள் தனித்தனியாகப் பேசமுடியாமல் போகும்; இரண்டு அமைச்சர்களுடைய டிமாண்டிலும் எப்படி அங்கத்தினர்கள் பாதிப் பாதியாகப் பேசுவது? என்னைக் கேட்டால், இரண்டு மணி கனம் கக்கன் அவர்களுடைய டிமாண்டுகளுக்கும், இரண்டு மணி கனம் லூர்தம்மாள் சைமன் அவர்களுடைய டிமாண்டுக்கும் கொடுப்பதுதான் சரி.

Sri S. NAGARAJA MONIGAR: அப்படியானால் ஒரு அங்கத்தினர் இரண்டு அமைச்சர்களுடைய டிமாண்டிலும் பேச முடியாமல் போய்விடும்.

Mr. SPEAKER: அதற்கென்ன செய்வது?

Sri V. K. RAMASWAMY MUDALIYAR: Sir, the group of Demands to be moved by the Hon. Minister for Works is entirely different from the other Demand to be moved by the Hon. Minister for Local Administration. They cannot all be taken up together.

Mr. SPEAKER: Yes, the Demands to be moved by the Hon. Minister for Works relate to Civil Works and the Demand to be moved by the Hon. Minister for Local Administration relates to grants to municipalities and so on. How can these be combined? (After a pause) I think the House agrees to allot two hours for the Demands to be moved by each Hon. Minister. We will leave it to the Hon. Ministers as to who will move the Demands first. I think the Hon. Sri Kakkan is moving his Demands first.

One more point. According to the original programme, Demand XLI will not come up for discussion but will come under guillotine. But the Hon. Minister is ready with his note on the Demand also. As such we can take all the three Demands, namely, Demands XXVI, XXVII and XLI and remove Demand XLI from the list of Demands to be guillotined.

22nd April 1960]

THE HON. SRI P. KAKKAN: Mr. Speaker, Sir, on the recommendation of the Governor, I move—

'That the Government be granted a sum not exceeding Rs. 7,46,55,800 under Demand XXVI—Civil Works—Works'.

SRI A. GOVINDASAMY: Mr. Speaker, Sir, I move the cut motion standing in my name, namely—

'That the allotment of Rs. 7,46,55,800 under Demand XXVI—Civil Works—Works be reduced by Rs. 100'.

THE HON. SRI P. KAKKAN: Mr. Speaker, Sir, on the recommendation of the Governor, I move—

'That the Government be granted a sum not exceeding Rs. 1,42,30,200 under Demand XXVII—Civil Works—Establishment and Tools and Plants'.

SRI V. K. KOTHANDARAMAN: என் பெயரில் இருக்கும் வெட்டுப் பிரேரணையை நான் பிரேரேபிக்கிறேன்.

'That the allotment of Rs. 1,42,30,200 under Demand XXVII—Civil Works—Establishment and Tools and Plants be reduced by Rs. 100'.

THE HON. SRI P. KAKKAN: Mr. Speaker, Sir, on the recommendation of the Governor, I move—

'That the Government be granted a sum not exceeding Rs. 3,70,32,700 under Demand XLI—Capital Outlay on Civil Works'.

SRI A. GOVINDASAMY: Mr. Speaker, Sir, I move the Cut Motion standing in my name, namely—

'That the allotment of Rs. 3,70,32,700 under Demand XLI—Capital Outlay on Civil Works be reduced by Rs. 100'.

MR. SPEAKER: The Demands and the cut motions are before the House for discussion. I hope half-an-hour will do for the Hon. Minister to reply. I allow ten minutes for every hon. Member.

THE HON. SRI P. KAKKAN: கனம் சபாநாயகர் அவர்களே, முன்னுரையாக நான் இந்த மன்றத்திலே எடுத்துச் சொல்ல வேண்டிய கருத்துக்களையெல்லாம், ஏற்கெனவே அங்கத்தினர்களுக்குப் புரியக் கூடிய முறையில், அச்சிட்டு தங்கள் மூலம் வழங்கியிருக்கிறேன். அங்கத்தினர்கள் கடந்த வருடம் சில நல்ல ஆலோசனைகளைச் சொன்னதன் மேல் நான் அதிக உற்சாகத்தோடு பணியாற்ற முடிந்தது. அதே போல் இவ்வருடமும், சிறந்த ஆலோசனைகளைச் சொல்லி நல்ல முறையிலே இந்த இலாகாக்கள் பணியாற்ற வாய்ப்புக் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அங்கத்தினர்கள் அதிகமாகப் பேச வேண்டியிருப்பதால், நான் சொல்ல வேண்டியதை கடைசியில் பதிலளிக்கும் முறையில் சொல்லுகிறேன் என்று தெரிவிக்க விரும்புகிறேன்.

SRI A. GOVINDASAMY: கனம் சட்ட மன்றத் தலைவர் அவர்களே, இன்றைய தினம் கனம் மராமத்து இலாகா அமைச்சரவர்கள் ரோடு பராமரிப்புக்காகவும், மற்றதற்காகவும் கொண்டுவந்திருக்கும் மானியங்களின் மீது நான் கொடுத்துள்ள வெட்டுப் பிரேரணையை வலியுறுத்திப் பேச விரும்புகிறேன். நம் அரசாங்கம் மத்திய சர்க்காரிடமிருந்து, பெற

வேண்டிய நிதியில், மிகக் குறைவான பாகத்தையே பெற்றிருக்கிறார்கள். சென்ற ஆண்டு நிலையைப் பார்க்கும்போது, என் அம்மாதிரிக் குறைவான தொகையைப் பெற்றார்கள் என்று கேட்க வேண்டிய நிலையில் இருக்கிறேன். மத்திய சர்க்காரிடமிருந்து, ரூ. 17,72,200 எதிர் பார்த்து, ரூ. 9,20,000 தான் நம் அரசாங்கம் பெற்றிருக்கிறது. என் அவ்வளவு குறைவாகப் பெற்றார்கள் என்று விளக்கம் கோருகிறேன். இந்த ஆண்டிலும், சென்ற ஆண்டு கேட்டதை விட ரூ. 10 லட்சம் குறைவாகக் கேட்டிருக்கிறார்கள். சென்ற ஆண்டில் கேட்ட தொகையை விடக் குறைவாகப் பெற்றார்கள் ; இந்த ஆண்டிலோ, கேட்கும்போதே குறைவாகக் கேட்டிருக்கிறார்கள். பெரிய சாலைகள் பராமரிப்புக்காகவும், பதிய சாலைகள் போடவும், தேசீயச் சாலைகள் பாதுகாப்புக்கும் என் இவ்வளவு குறைவாகப் பெறுகிறார்கள், கேட்கிறார்கள் என்று முதலிலே குற்றச்சாட்டை இந்த அரசாங்கத்தின் மீது சுமத்த விரும்புகிறேன். இதற்குத் தக்க சமாதானம் கனம் அமைச்சர் அவர்கள் கூறவேண்டும்.

தேசீயப் பெருஞ்சாலைகள் எடுத்துக்கொண்டால், 1959-60-க்கு ரூ. 23 லட்சம் ஒதுக்கப்பட்டது. ஆனால், 1959 டிசம்பர் முடிய, ரூ. 19,60,000 தான் செலவு செய்யப்பட்டிருக்கிறது. கிட்டத்தட்ட ரூ. 3 லட்சத்திற்கு மேல் செலவழிக்கப்படாமல் இருக்கும் நிலை இருக்கிறது. அதற்கென்ன காரணம்? மாவட்டங்களிலே சேர்க்கப்பட்ட சாலைகள் விஷயத்திலும், இரண்டாவது திட்ட முதல் நாலு ஆண்டுகளுக்குள்ளாக, ரூ. 3·37 லட்சம் செலவழிக்கப் படாத நிலைதான் இருக்கிறது. அதிகம் செலவு செய்ய முடியாமற் போனதற்குக் காரணம் என்ன என்று அறிய விரும்புகிறேன். இப்படி செலவுக்கு என்று போடும்போது அதிகமாகக் காட்டி, ஒதுக்கி, உண்மையில் குறைவாகச் செலவு செய்து, பொது மக்களுக்கு ரோடு வசதிகள் செய்ய வில்லை என்ற குற்றச்சாட்டை என்னால் சொல்லாமல் இருக்க முடியவில்லை.

விக்ரவாண்டி லோயர் அணைக்கட்டு ரோட்டில் சில பதிய பாலங்களைக் கட்ட இருக்கிறார்கள். அதே நோக்கில் அந்த ரோடு முக்கியமானது. நெய்வேலித் திட்டம் நிறைவேறும்போது, இந்த ரோடு அதிகமாகப் பயன் படுத்தவேண்டியிருக்கும் என்று சொல்லப்படுகிறது. பெரிய பெரிய என்ஜின்களும், டிராக்டர்களும் போகக் கூடிய நிலை இருக்கும் என்று சொல்லப்படுகிறது. இப்பொழுது இடிந்த பழைய பாலங்களை மராமத்து செய்து வேலை பார்க்கிறார்கள். அங்கே சில பாலங்கள் மிகக் கேவலமான முறையில் இருக்கிறது. விக்ரவாண்டி முதல் பெண்ணையாற்றங்கரை வரை பல சிறிய பாலங்கள் அப்படியிருக்கின்றன. அது அமைச்சருக்கும் தெரியும். அவைகளெல்லாம் கட்டி சரி செய்யவேண்டியது அவசியமாக இருக்கிறது. மேலும், சில சிறிய பாலங்கள் உறுதியான நிலையில் கட்டி மராமத்து செய்ய வேண்டியது அவசியம். அப்பொழுதுதான் அந்த ரோட்டைப் பயன்படுத்த முடியும். இந்த ரோட்டை அகலப்படுத்தப் போவதாகச் சொல்லப்படுகிறது. சமீபத்தில்கூட வெள்ளம் வந்தபோது, அந்தப் பகுதிகள் எல்லாம் உடைப்பெடுத்து, பெரிய நஷ்டம் ஏற்படும் நிலை ஏற்பட்டது.

நமது சீப் என்ஜினீயர் அவர்கள் அந்தப் பகுதிக்கு வந்து பார்த்து விட்டு வந்திருக்கிறார். நமது அமைச்சர் அவர்களும் வந்து பார்த்த பகுதி தான். அந்த ரோடுகளை நல்ல முறையில் கவனித்துக்கொண்டால் நெய்வேலி திட்டம் நல்ல முறையில் நிறைவேறும்போது அந்த ரோடு சரியான முறையில் பயன்படக் கூடியதாக இருக்கும் என்பதை இந்த நேரத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். கனம் முதல் அமைச்சர் அவர்கள் பல இடங்களுக்குப் போகும்போது இரட்டை ரோடுகள் போட்டுத் தருவதாக வாக்குறுதி அளிக்கிறார். ஆனால் நடைமுறைக்கு வருவதாகத் தெரிய வில்லை. அவர் சொல்வது போன்று இரட்டை ரோடுகள் போட்டால் இப் பொழுது ஏற்படுகிற லாரி ஆக்ஸிடென்ட் கார் ஆக்ஸிடென்ட் போன்றவை நடக்காமல் தவிர்க்க வசதியாக இருக்கும். ஆகவே பெரிய மானியத் தொகையை அதற்கு என்று ஒதுக்கிச் செலவு செய்ய வேண்டும். - பெரும்

22nd April 1960] [Sri A. Govindasamy]

நெடுஞ்சாலைகள் தேசீய சாலைகள் இவைகளையெல்லாம் போடுவதற்கு படிப் படியாக முயற்சி செய்ய முன் வர வேண்டும். கனம் அமைச்சர் அவர்கள் கொடுத்த வாக்குறுதியானது உண்மையிலேயே பாராட்டக்கூடிய செய்தியாக இருந்தது. அதை நடை முறைக்குக் கொண்டுவருவதற்கு திட்டம் வகுத்து அவைகளை எந்த இடங்களில் எடுத்துக்கொண்டு சர்வே செய்து இருக்கிறார்கள் என்ற விவரங்களை கனம் அமைச்சர் அவர்கள் சொல்வார்கள் என்று எதிர்ப்பார்க்கிறேன்.

மேலும் சில இடங்களில் எட்டு அல்லது ஒன்பது மைல்களுக்கு சிமண்டு ரோடும் சில இடங்களில் தார் ரோடும் போட்டுக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் மற்ற இடங்களில் ரோடுகள் மிகவும் மோசமான நிலைமையில்தான் இருக்கின்றன. உதாரணமாக ஒன்றைச் சொல்ல விரும்புகிறேன். கடலூர் சித்தூர் ரோட்டை எடுத்துக்கொண்டால் சில பகுதிகள் சிமெண்ட் பகுதியாகவும் சில பகுதிகள் தார் பகுதியாகவும் இருக்கின்றன. மற்ற இடங்களில் எல்லாம் ரொம்பவும் மோசமான நிலைமையில் இருக்கின்றன. பெரிய சாலைகளை கவனிப்பதாகவும் கனம் அமைச்சரவர்கள் அச்சடித்து கொடுக்கப்பட்ட விளம்பரத்தில் குறிப்பிட்டிருக்கிறார். உண்மையிலேயே பார்க்கப்போனால் நெடுஞ்சாலைகளிலிருந்து கிராமங்களுக்குப் போக வேண்டுமானால் நல்ல ரோடு வசதிகள் கிடையாது. பல ரோடுகள் அரசாங்கத்தின் கவனக் குறைவால் ரொம்பவும் மோசமான நிலைமையில் இருக்கின்றன. தென்னாற்காடு மாவட்டத்திற்குப் பக்கத்தில் புதுச்சேரி இருக்கிறது. அது இந்தியாவுடன் சேர்ந்தவுடன் பல ரோடுகள் புதியதாகப் போடப்பட்டு வருகின்றன. இருக்கக்கூடிய ரோடுகளும் நல்ல முறையில் பராமரிக்கப்பட்டு வருகின்றன; கிராமங்களுக்குப் போவதற்கு நல்ல ரோடுகள் போட்டுப் புதிதாக பஸ்கள் போவதற்கும் வசதி செய்து கொடுக்கப்பட்டிருக்கிறது பஸ்கள் போகாத கிராமங்கள் இல்லை என்ற அளவில் அங்கேயெல்லாம் பஸ்கள் போய்க்கொண்டிருக்கின்றன. அந்த நிலைமையில் புதுச்சேரி-கடலூர்-விழுப்புரம்-திண்டிவனம் தொடர்ந்து சொல்லக்கூடிய ரோடுகள் நமது தென்னாற்காடு மாவட்டத்தில் வழியாகத்தான் செல்லவேண்டியதாக இருக்கிறது. அந்த ரோடுகள் எல்லாம் அந்த ரோடில் பிணைந்திருக்கிறது. ஆனால் தென்னாற்காடு மாவட்டத்திலுள்ள ரோடுகள் எல்லாம் அந்த மாவட்டத்தில் இருக்கிற காரணத்தால் சில பஸ் ரூட்கள் சில கிராமங்களுக்கும் போக முடியாமல் இருக்கிறது. அதற்குக் காரணம் அந்த கிராமங்களுக்குப் போகக்கூடிய ரோடுகள் நல்ல முறையில் இல்லாமல் இருப்பதால் அங்கேயெல்லாம் பஸ்கள் போக முடியாமல் இருக்கின்றன. ஆகவே அங்கு நல்ல ரோடுகளைப் போட்டுக் கொடுத்து பஸ் வசதியை அந்த கிராமங்களுக்கு எக்ஸ்டென்ட் பண்ணிக்கொடுக்கும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். அந்தப் பகுதிகளுக்கும் கனம் அமைச்சர் அவர்கள் சென்றிருப்பார் என்று நினைக்கிறேன். திண்டுக்கல் தாமத்தூர் சாலையில் கனம் அமைச்சர் அவர்கள் சென்றிருப்பார் என்று நினைக்கிறேன். மற்றும் கம்பளம் ரோடுகளிலும் சென்றிருப்பார் என்று நினைக்கிறேன். அந்தப் பகுதிகளிலுள்ள ரோடுகளை எடுத்துக்கொண்டால் ரொம்பவும் மோசமாகத்தான் இருக்கிறது. அதை போலவே மேலப்பார் ரோடும் மிகவும் மோசமாக இருக்கிறது. இப்பொழுது அங்கே பஸ்கள் போய்க்கொண்டிருக்கின்றன. வெள்ளம் வரும் காலங்களில் அங்கு பஸ் போக முடியாமல் தடைப்படக்கூடிய நிலைமை ஏற்பட்டு வருகிறது. புதுச்சேரி நமது இந்தியாவுடன் சேர்ந்த காரணத்தால் தென்னாற்காட்டில் அதைச் சேர்ந்த பகுதிகளுக்குச் செல்லக்கூடிய கிராமங்களுக்கு ரோடு வசதி செய்து கொடுக்க வேண்டியதவசியமாக இருக்கிறது. அதைத் தொடர்ந்துள்ள ரோடுகள் சரியான முறையில் அமைக்கப்பட வேண்டும். அப்படி அந்த ரோடுகளை செப்பனிட்டுக் கொடுத்தால் வியாபார விருத்தியும் தொழில் விருத்தியும் அடைவதற்கு வசதியாக இருக்கும். புதுச்சேரிக்குப் போக வேண்டுமானால் தென்னாற்காடு ரோடுகள் வழியாகத்தான் செல்ல வேண்டியதாக இருக்கிறது. ஆகவே தென்னாற்காடு மாவட்டத்திலுள்ள ரோடுகளை நல்ல முறையில் செப்பனிட்டு வைத்துக்கொண்டால் புதுச்சேரிக்குப் போவதற்கு வசதியாக இருக்கும். ஆகவே கனம் அமைச்சர் அவர்கள் அவைகளில் எல்லாம் கவனம் செலுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

[Sri A. Govindasamy] [22nd April 1960

என்னுடைய வெட்டுப் பிரேரேரணை கிராம ரோடுகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து "ட்ரங்க்" ரோடுகளுடன் கிராம ரோடுகளுக்கு இணைப்பு இருக்கும்படி செய்யவேண்டும் என்பதுதான். கனம் அமைச்சர் அவர்களும் மற்றவர்களைப் போலதான் தேர்தல் காலத்தில் ரோடுகள் போட்டுக்கொடுக்கிறோம் என்று தங்களுடைய சுற்றுப்பிரயாணங்களில் சொல்வது வழக்கம். ஆனால் பிறகு அதைப்பற்றி அவ்வளவாக கவனிப்பது இல்லை. கனம் அமைச்சர் அவர்கள் தங்களுடைய சுற்றுப்பிரயாணத்தின்போது பல கிராமங்களுக்கு சென்றிருக்கிறார். அப்பொழுது சில இடங்களுக்கு ரோடு தொடர்பு இல்லாத காரணத்தால் ஜீப் காரில் செல்ல வேண்டியதாக இருந்தது. மழை காலமாக இருந்தால் அப்படி ஜீப் காரில்கூட போக முடியாத நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அப்பொழுது ஜீப் கார் சேற்றில் புதைந்து போய் தள்ளக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. சில இடங்களில் மழை காலமாக இருந்தால் பாதையே இல்லாமல் போய் விடுகிறது. சில இடங்களில் அமைச்சர்கள் வருகிறார்கள் என்று புதியதாக ரோடுகள் போடுகிறார்கள். ஆனால் அவர்கள் சென்ற பிறகு மழை பெய்தவுடன் அந்த ரோடுகள் எல்லாம் இருந்த இடம் தெரியாமல் போய் விடுகின்றன. இது அமைச்சர்களுக்கு எல்லாம் நன்றாகத் தெரியும். மற்றும் அமைச்சர்கள் சுற்றுப் பிரயாணம் வரும்போது அங்கே இருக்கக்கூடிய பாலங்களுக்கு வெள்ளை அடித்து சுத்தமாக வைத்துவிடுவார்கள். வெள்ளைக்காரர்கள் காலத்தில் இப்படிச் செய்தால் நன்றாக இருந்திருக்கும். ஆனால் இப்பொழுது அமைச்சர்கள் போகும்போது அப்படி வெள்ளை அடிப்பதால் பின்பு அது இல்லாமலே போய்விடுகிறது. இந் நிலைமையில் பல ரோடுகள் கவனக் குறைவால் சீர்கேடான நிலைமையில் இருக்கின்றன. அவைகளையெல்லாம் நல்ல முறையில் வைத்துக் கொள்வதோடு புதிய ரோடுகளையும் கிராமப் பகுதிகளுக்குச் செல்வதற்குப் போட்டுக் கொடுக்கும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

ரோட்டுகள் போடுவதற்கு ஜில்லா போர்டுக்கு வேண்டிய பண வசதி இல்லாமல் இருக்கிறது. அதனால் அவர்களால் போட முடியவில்லை. இப்பொழுது பல ஸ்தல அபிவிருத்தி வேலைகள் நடைபெறுகின்றன. அவைகளுக்கு பொது மக்கள் சர்க்காருக்கு பணம் கொடுக்கிறார்கள். ஜில்லா போர்டுக்கு பணம் கொடுக்கக்கூடிய வசதி இல்லாமல் இருப்பதால் அந்த வேலைகள் எல்லாம் நிறைவேற்றப்படாமல் தடைப் பட்டுக் கிடக்கின்றன. என்னுடைய தொகுதி ஸ்தல அபிவிருத்தி வேலைக்கு என்று பொதுமக்களிடம் பணம் வாங்கி அது கஜானாவில் செலுத்தப்பட்டிருக்கிறது. மூன்று வருஷங்களாகியும் இன்னும் வேலை ஆரம்பிக்கப்படவில்லை. ஆனால் தேர்தல் நேரத்தில் மட்டுமே ரோடுகள் போட்டுக்கொடுக்கிறோம் என்று சொல்லுகிறார்கள். ஆனால் பிற்பாட்டு அதற்கு வேண்டிய அக்கரை எடுத்துக்கொள்வதாகவே இல்லை. ஆகவே கிராமங்களுக்குச் செல்லக்கூடிய அளவில் புதிய ரோடுகள் போட்டுக்கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். சில இடங்களில் தார் ரோடும் சிமெண்ட் ரோடும் போடுகிறார்கள். சில இடங்களில் மண் ரோடுகள்கூட போடுவதாக இல்லை. பல இடங்களில் ரோடுகளே இல்லாமல் படுமோசமாக இருக்கின்றன. ஆகவே ரோடுகள் இல்லாத இடங்களுக்கு ரோடுகள் வசதி செய்துகொடுத்தால் தொழில் வளருவதற்கும் வியாபாரம் வளருவதற்கும் வசதியாக இருக்கும். ஆகவே கிராம ரோடுகளுக்கு அதிகப்படியாக கவனம் செலுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். நெடுஞ்சாலைகளுடன் கிராமப்பகுதி ரோடுகளுக்கு இணைப்பு இருக்கும் அளவில் ரோடுகள் இணைப்பு இருக்கும்படி போட்டுக்கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இவைகளில் அதிகப்படியான கவனம் செலுத்தவேண்டும் என்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்ளுகிறேன்.

**Mr. SPEAKER :** கனம் அங்கத்தினர்கள் ஒவ்வொருவரும் தயவு செய்து பத்து நிமிஷங்கள்தான் பேச வேண்டும். அதிகப்படியான நேரம் கொடுக்க முடியவில்லை. மணி அடித்தவுடன் தங்களுடைய பேச்சை

22nd April 1960] [Mr. Speaker]

நிறுத்திக்கொள்ளவேண்டும். அப்படி முடிக்க முடியவில்லையானால், முடிவதற்கு ஒரு நிமிஷம் முன்னதாக மணி அடிக்கிறேன். அப்பொழுது தங்களுடைய பேச்சை முடித்துக்கொள்வதற்கு முயற்சிக்க வேண்டும். இப்பொழுது கனம் ஸ்ரீனிவாச அய்யர் பேசுவார்.

* SRI R. SRINIVASA IYER: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மானிய கோரிக்கையின் மீது அதை ஆதரிக்கும் வகையில் சில வார்த்தைகளைச் சொல்ல விரும்புகிறேன். பெருவழி சாலை சீப் இஞ்சினியர் அவர்களும் இது சம்பந்தமான டிபார்ட்மெண்டில் உள்ளவர்களும் நல்ல முறையில் பணியாற்றி வருகிறார்கள் என்பதைக் கண்டு நாம் அவர்களை பாராட்டத்தான் வேண்டும். எங்கு பார்த்தாலும் இப்பொழுது புது ரோடுகள் போடப்பட்டுக்கொண்டிருந்தபோதிலும்கூட அவர்களுடைய முயற்சி பெரும் முயற்சியாக இருந்தபோதிலும்கூட நமது இஷ்டம் இன்னும் பூர்த்தியாகவில்லை என்றுதான் சொல்ல வேண்டியதாக இருக்கிறது. முயற்சி இருந்தால் மட்டும் போதாது. நாம் ஒதுக்கும் பணம் ஜாஸ்தியாக இருக்கவேண்டும். இந்த மானிய கோரிக்கைக்கு இப்பொழுது ஒதுக்கப்பட்டிருக்கும் தொகை மிகவும் குறைவு என்பதைச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். முன்னேற்றப்பாதையில் நமது ராஜ்யம் போய்க்கொண்டிருக்கிறது என்று சொல்லுகிறார்கள். ஆனால் பாதைகளில் முன்னேற்றம் இல்லை. கிராமங்கள் தாழ்ந்து போகிறது, நகரங்கள் விருத்தி அடைகிறது. நகரங்களில் மெட்டல் பிளாக் டாப் ரோடுகள் போடப்படுகின்றன. தார் ரோடுகள், சிமெண்ட் ரோடுகள் போடப்படுகின்றன. ஆனால் கிராமங்களில் ரோடுகள் கவனிப்பாரற்று இருக்கின்றன. கிராமங்களில் ஜனங்கள் போவதாக இருந்தால் வண்டிகள் மணிக்கு இரண்டு மைல்கள்தான் போகின்றன. ஆகவே கிராமங்கள் ரொம்பவும் மோசமான நிலைமையில் இருக்கின்றன. நமது லெஜிஸ்லேடிவ் அசெம்பௗி செக்ரடேரியட் சில புள்ளி விவரங்களை இதற்கு ஆதாரமாக தயாரித்துக் கொடுத்திருக்கிறார்கள். ஆந்திராவில் 1·7 கோடி, அஸ்ஸாமில் 1·4 கோடி, சென்னை ராஜ்யத்தைவிட அது எவ்வளவோ சின்னது. பீகார் மூன்று கோடி. சதுர மைலில் சென்னையைவிட அது எவ்வளவு சின்னது என்பதைப் பார்த்துக்கொள்ள வேண்டும். மத்திய பிரதேசத்தில் ட்ரான்ஸ்போர்ட் சம்பந்தமாக 1·81 கோடி, ஒரிஸ்ஸாவில் 94 லட்சம் டிரான்ஸ்போர்ட்டுக்காக 1960-61-க்கு ஒதுக்கப்பட்டிருக்கிறது. எவ்வளவு தூரம் இந்த ட்ரான்ஸ்போர்ட்டுக்கு ஒதுக்கப்பட்டிருக்கிறது என்பது இந்தப் புள்ளி விவரங்களில் கொடுக்கப்பட்டிருக்கிறது. சென்னை ராஜ்யத்தில் கணக்குப் பார்த்தால் போடப்பட்ட ரோடுகளில் 75 சத விகித ரோடுகள் கிராமப்பகுதி ரோடுகள். பெரிய ரோடுகள் சில போடப்பட்டிருக்கின்றன. அவைகள் அங்கங்கே சில இடங்களில் போடப்பட்டிருக்கின்றன. அவைகளுக்கு ப்ளாக் டாப் செய்யாமல் இருக்கின்றன. சில இடங்களில் அவைகள் பலப்படுத்தப்படாமல் இருக்கின்றன. அதனால் அதன் மேல் பஸ்கள் போக முடியவில்லை. சாதாரணமாக கார்கள்கூட போக முடியாமல் இருக்கிறது. இப்பொழுது விவசாயம் முன்னேற்றமடைந்துகொண்டு வருகிறது என்று சொல்லப்படுகிறது. ரோடுகள் சரியாக இல்லாவிட்டால் விவசாயம் முன்னேற்றமடைந்து பயன் இல்லை. எதற்கு எடுத்தாலும் தஞ்சை ஜில்லாவை எடுத்துக்காட்டப்படுகிறது. தஞ்சை ஜில்லாவைப்பற்றி சொல்லும்போது "அரசன் பார்த்தால் அடுத்து விளையாது" என்று சொல்லுவார்கள். அது போலவே எதற்கு எடுத்தாலும் தஞ்சை ஜில்லா ரொம்பவும் பணக்கார ஜில்லா என்று சொல்லப்படுகிறது. அது நல்ல ஜில்லா, அதிகப்படியாக உற்பத்தியாகிறது, அந்த ஜில்லாவிலுள்ளவர்கள் எல்லோரும் பணக்காரர்கள் என்று சொல்லுகிறார்கள். அப்படி இருந்தும் அங்கு வேண்டிய ரோடு வசதி கிடையாது. பாழாப்போன ஜில்லாவாக இருக்கிறது. கடலோரம் பெரிய ரோடு இருக்கிறது. அது 142 மைல் நீளம் இருக்கிறது. சென்னை மாகாணத்தில் கீழே சமுத்திர கரை ஓரம் சேது ரோடு என்று 540 மைல் நீள ரோடு இருக்கிறது. அந்த ரோட்டின் அழகைப் போய் பார்த்தால் தான் தெரியும். அந்த ரோடில் மைல் கல்தான் இருக்கிறது. ரோடு இருக்கிற இடம் தெரியவில்லை. ஏதோ நல்ல முறையில் இந்த மாகாண

[Sri R. Srinivasa Iyer] [22nd April 1960

10 a.m. Legislative Committee on Planning அவர்கள் யோசனை பண்ணி சேது ரோடு என்கிற East Coast Road-க்கு 5 கோடி ரூபாய் செலவிட்டு National Highway ஆக்கவேணும் என்று தீர்மானம் பண்ணி Central Government-க்கு சிபார்சு செய்திருக்கிறார்கள். ஆனால் சிபார்சு இருந்தால் மட்டும் போதாது. அந்த ரோடு ஜாஸ்தியான முக்கியத்துவம் உள்ளது. இந்த ரோடினால் மிகவும் பிற்போக்கான இடத்தவர்களும் மீனவர்களும் வசிக்கிற 500 மேல் ஜாஸ்தியான கிராமங்கள் பயன் அடையும். பல கிராமங்களில் மீனவர்கள் and other backward communities இருக்கிறார்கள். அவர்களுக்கு நல்ல ரோடு மிகவும் தேவை. இப்போது ஒரு கூடை மீனை தூக்கிக்கொண்டு நடந்துபோனால் கதறிக்கொண்டு போகிறார்கள். நல்ல ரோடு வசதி இல்லை. இதற்கு 5 கோடி ரூபாய் ஒதுக்கினது போதாது. இன்னும் அதிகமாக ஒதுக்கவேண்டும். கீழ்க்கரை சேது ரோடு மிகவும்

(Sri A. Govindasamy in the Chair.)

முக்கியமானது. மூன்றாவது ஐந்தாண்டு திட்டத்திலாவது அதற்கு முதலில் priority கொடுத்து வேலை செய்ய வேண்டுமென்று நமது சர்க்காரை வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறேன். ஏனென்றால் இங்கிருந்து சிபார்சு பண்ணினாலும்கூட சில இடையூறு Central Gov rnmen -ல் நடப்பதாக ஆதாரப்பூர்வமாக தெரிகிறது. அந்த முறையில் சேது ரோடு (East Coast Road) எந்த வகையிலாவது கண்டிப்பாக National Highways ஆக மாற்ற வற்புறுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதே நேரத்தில் இப்போது 20 வருஷத்துக்கு ஒரு பெரிய திட்டம் வகுக்கப் பட்டிருக்கிறது. இருபது வருஷத்துக்கு ரோடுகள் சீரமைப்புக்கு ஒரு தடவை திட்டம் போட்டு கிராமாந்தரங்கள் முன்னேறிக் கொண்டு வரும் என்று நினைப்பது சாத்தியமான காரியம் அல்ல. இருபது வருஷத்துக்கு 4 ஐந்தாண்டு திட்டங்கள் ஆகும். இது ஒரு பெரிய திட்டம். அதிலே உங்கள் ரோடு எல்லாம் இருக்கு. மீமிசல் ரோடு சின்ன ரோடுகள் எல்லாம் இருக்கு என்று ஜாப்தாவைக் காட்டினால் அதை இந்த ஜன்மத்தில் அல்லது நமது பேரன் பிள்ளை காலத்தில் பார்க்கப்போகிறோமோ இல்லையோ தெரியவில்லை. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலாவது கிராமாந்தரங்களுக்கு எந்த வகையிலாவது விவசாயப்பொருள்கள் மார்க்கெட்டுக்கு சீக்கிரத்தில் ஒரு மணிக்கு 10 மைல் வேகத்திலாவது போகும்படியான ரோடு வசதி செய்து கொடுத்தால்தான் அந்தப் பகுதிகள் முன்னேறும். வேறு எந்த விதத்திலும் முன்னேறினாலும், மின்சாரத்திட்டம் மின்சாரவேகத்தில், முன்னேறினாலும் மின்சாரக்கம்பி ரிப்பேர் செய்வதற்கு ரோடு சரியாக இல்லாவிட்டால், மின்சாரம் போட்டு பிரயோஜனம் இல்லாமல் விளக்கு அணைந்தால், அதை சரி பார்க்க முடியாமல் போய் விடும் என்று வணக்கத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த விஷயத்தில் சில புள்ளி விவரங்கள் கொடுக்க ஆசைப்படுகிறேன். இப்போது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் ஆரம்பமாகிறது. மூன்று லக்ஷம் vehicles அதிகமாகும். அதாவது (Fast vehicles) வேகமாகச் செல்லும் வாகனங்கள் 1956–57-ல் 450,000 துரித வாகனங்கள் இருந்தன. 1960–61-ல் 6 லக்ஷமாக இருக்கிறது. இந்த 3-வது திட்ட முடிவில் அதாவது 1965–66-ல் 9 லக்ஷத்து 40 ஆயிரம் வாகனங்கள் இருக்கும். மோட்டார், மோட்டார்சைகிள் 125 ஆயிரம், மோட்டார் ஜீப் 330 ஆயிரம், லாரிகள் $3\frac{1}{4}$ லக்ஷம் இவ்வளவு ஆகப் போகிறது. இவைகள் ஓடுவதற்கு இப்போது இருக்கிற ரோடுகளில் போனால், மொத்தமாகத்தான் சொல்லுகிறேன், என்ன ஆசய? இந்தியா பூராவுமாகப் பாருங்கள். India map-ஐ பாருங்கள், விந்தியா பர்வதத்திற்கு வடக்கே நிறைய சப்பி போட்ட ரோடு, சிமெண்ட் கான்கிரீட் ரோடு 120 அடி அகலம் இருக்கிறது. சமீபத்தில் போய் பார்த்தேன். அதே விதத்தில் இந்தியாவின் வடபாகத்தின் ரோடுகள் கன்னல் பின்னலாக இருக்கிறது. காரணம் கரி இருக்கு, உலோகங்கள் இருக்கு. எல்லா வசதியும் பண்ணலாம் என்று சொல்லலாம். விவசாயி பயிர் பண்ணி அந்தப்பொருள்களைக் கொண்டுதான் சாப்பிடணும். இவன் நன்கு வாழ வழி பண்ணினால்தான் நாம் எந்த வகையிலும் முன்னேற்றம் அடையலாம். சீலிங் பில் கொண்டுவருகிற காலத்தில் உணவுப்பொருள் உற்பத்தி பெருக்குவதைப்பற்றி வலியுறுத்தினார்கள். அந்த விவசாயிகள்

22nd April 1960] [Sri R. Srinivasa Iyer]

நல்ல முறையில் நடமாட வேண்டுமானால் அவனுக்கு இதுபோன்ற வசதிகளை செய்து கொடுக்கவேண்டும் என்று இரண்டாம் முறையாக கேட்டுக் கொள்கிறேன். இதே நேரத்தில் கிராமங்களில் முக்கியமாக 1952-ம் வருஷத்திய புயலுக்குப்பின், விழுந்த பாலங்கள் கட்டப்படவில்லை. மூன்று தடவை estimate. 4 தடவை contract, ஆனால் வேலை முடியவில்லை. என் தொகுதியில் மல்லி பட்டணம் என்ற ஊரில் 2 பாலம் 1952, 1955 புயலில் விழுந்து 14,000 ரூபாய் அதற்கு ஒதுக்கப்பட்டு, இந்த வேலை இன்னும் நடைபெற வில்லை. எத்தனையோ letter எழுதியாச்சு. பேரா வூரணியிலிருந்து ஆவுடையார் கோவிலுக்கு போகிற ரோடில் காடு மண்டிப் போய்க்கிடக்கிறது. இப்போது சீப் என்ஜினீயரை பார்த்து நல்ல முறையில் வேண்டியதை செய்ய ஆரம்பித்திருக்கிறார்கள். மூன்றாவது திட்டத்தில் கிராமாந்திர ரோடுகளுக்கு முன் அதிக priority கொடுத்து ஒவ்வொரு கிராமமும் arterial roads உடன் சேரும் நல்ல connecting road உள்ள முறையில் அமைய வேண்டும். ஒரு கிராமம் பக்கத்து ரோடிலிருந்து 5 மைலுக்குள்ளாக இருக்க வேண்டும் என்று திட்டத்தைப் பார்த்தோம். ஒரு கிராமத்தான் ஒரு மைலுக்கு மேல் நடந்து ரோடுக்கு போகக்கூடாது, அது மாதிரி பண்ணினால்தான் முன்னேற்றம் அடைய முடியும். விவசாயப் பொருள் உற்பத்தி பெருகப் பெருக transport வசதி கிடைத்தால் ஒழிய மூலப்பொருள்களை உற்பத்தி பண்ணியும் விவசாயப் பொருள்களை உற்பத்தி பண்ணியும் எந்த விதத்திலும் முன்னேற முடியாது என்று வற்புறுத்தித் தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI K. VINAYAKAM: Point of order. இப்பொது மான்யத்தின் மீது விவாதம் நடக்கிறது. அமைச்சர் அவர்கள் அந்த மான்யத்துக்கு பணம் வேண்டுமென்று சட்டசபையைக் கேட்டிருக்கிறார்கள். அந்த நேரத்தில் ஒருவர் cut-motion கொடுத்திருக்கிறார். Cut-motion இப்போது விவாதத்தில் இருக்கும்போது cut-motion கொடுத்தவர் சபையின் தலைவராக இருப்பது தவறு அது பார்லிமெண்ட் procedure-க்கு விரோதம் என்று படுகிறது. இந்த point of order-க்கு விளக்கம் சொல்ல முடியுமா. சபா நாயகரை கேட்டு சரிதானா என்று சொல்ல வேண்டுமென்று விரும்புகிறேன்.

TEMPORARY CHAIRMAN (Sri A. Govindasamy) : இப்போது என்னால் தீர்ப்பு கூற முடியும் என்ற உறுதியை அங்கத்தினர் அவர்களுக்கு தெரிவித்துக்கொண்டு வெட்டுப் பிரேரபணையைக் கொடுத்தவர் தலைமை தாங்குவதில் தவறு இல்லை என்று தீர்ப்பு அளிக்கிறேன். அங்கத்தினர் அது பற்றி விளக்கம் வேண்டுமென்றால் சபாநாயகர் அறைக்குவந்தால் தெரிவிக்கப்படும்.

*SRIMATHI A. S. PONNAMMAL : கனம் தற்காலிக தலைவர் அவர்களே, அமைச்சர் அவர்களால் கொண்டுவரப் பட்ட மான்ய கோரிக்கையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். நாம கிராமப் பகுதிகளில் சென்று பார்க்கிறோம். குழந்தைகள் பாடுகிறார்கள். சின்னஞ்சிறு பட்டிக்காடு எல்லாம் செல்ல முடியாது முன்னே, இப்போது சின்னபுன்னமாக ரோடுகள் வந்ததால் ஜம்மென்று மோட்டார் பறக்கிறது என்று பாடக்கூடிய அளவில் இருந்த போதிலும்கூட இன்னும் பல இடங்களில் ரோடுகள் போடாமல் இருப்பதை எங்களைப் போன்றவர்கள் பார்ப்பதற்கு மிகவும் வருந்துகிறோம். காரணம் அது சம்பந்தப் பட்ட அதிகாரிகள் எல்லாம் நல்ல சுறுசுறுப்பாக நல்ல முறையில் வேலை செய்த போதிலும்கூட காலதாமதம் ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. அதற்கெல்லாம் முக்கிய காரணம் பணம் போதவில்லை. என்ற குறை இருக்கிறது. ஆகவேதான் இங்கு ஒதுக்கப்பட்டிருக்கிற பணத்தைவிட இன்னும் அதிகமாக ஒதுக்கியிருப்பார்களேயானால் எல்லா கிராமங்களுக்கும் ரோடு போடும் வசதிகள் செய்திருக்கிறார்கள் என்ற திருப்தியுடன வாழக்கூடிய நிலைமை இருக்கும். அந்த

[Srimathi A. S. Ponnammal] [22nd April 1960

நிலைமையில் பணம் குறைந்து இருப்பது மிகவும் வருந்தத்தக்க விஷயம்தான். மதுரை ஜில்லாவைப்பற்றி கனம் அமைச்சர் அவர்களுக்கு சொல்லித் தெரிய வேண்டிய அவசியம் இல்லை. நன்கு தெரிந்திருக்கிறார்கள். அவர்கள் தெரிந்தும்கூட அந்தப்பகுதியில் உள்ள ரோடுகள் இன்னும் முடியவில்லை என்று வருந்துகிறோம். அதாவது Highways இலாகாவில் பாலமேடு, செந்தமங்கலம் இந்த ரோடுகள் பற்றி Planning Committee-யிடம் பல முறை சொல்லியும் இன்னும் எந்தவித மாறுதல் இல்லாமல் அப்படியே இருக்கிறது. எந்தக் குறையினால் அப்படி இருக்கிறது என்று எங்களைப் போல்உள்ளவர்கள் தெரிந்து கொள்ள முடியவில்லை. பஸ் போய்க்கொண்டிருக்கிறது. பெண்கள் எல்லாம் பிரயாணம் செய்ய முடியாத ஒரு நிலைமையில் மிகவும் வேதனைப் படக்கூடிய அளவில் இருக்கிறது. இப்பேர்ப்பட்ட ரோடுகளை எல்லாம் உடனடியாக 4, 5 மாதங்களுக்குள் விரைவில் முடிவுற ஆவன செய்தால், மக்களின் சார்பில் அமைச்சருக்கு நன்றியை தெரிவித்துக்கொள்ளுகிறேன். அது மட்டுமல்லாமல் ஆண்டிபட்டி பங்களா to அழகர் கோவில் via வாவிடமருதூர் ரோடு விரைவில் அமைத்தால் ஜனங்களுக்கு போக்கு வரத்திற்கு நல்ல முறையில் பயன்படும். அதோடு நகர பிரிவு to ஆனைக்குளம் ரோடும் கரையில் போடப்பட்டுள்ளது. அந்தக் கரையில் போட்டுள்ள ரோட்டையும் பக்கத்து நிலத்துக்காரர்கள் நெருக்கி விட்டார்கள். இப்போது வண்டிகள்கூட போக முடியாத நிலையில் இருக்கிறது. இவைகளை எல்லாம் கீழ்உள்ள அதிகாரிகளுக்கு எடுத்துக் கூறி இம்மாதிரியான குறைகளை விரைவில் போக்க ஆவன செய்ய வேண்டுமாய்க் கேட்டுக்கொள்கின்றேன். அது மாத்திரம் அல்ல. ஆணைப்பட்டி to விர்வாடு (via) குள்ளிச்செட்டி பட்டி, சிவஞானபுரம் ரோடு மிகவும் மோசமாக இருக்கிறது என்ற காரணத்தை காட்டி அந்த ரோட்டுக்கு பஸ் கொடுக்க மாட்டோம் என்று சொல்லிவிட்டார்கள். இந்த ரோட்டை உடனடியாக சீர் படுத்தி அதில் பஸ் போக ஏற்பாடு செய்ய வேண்டுமென்று அமைச்சரை கேட்டுக்கொள்கிறேன். அடுத்து சக்காபட்டி to ரங்கப்ப நாய்க்கன்பட்டி ரோட் இரண்டாவது ஐந்து ஆண்டு திட்டத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறது. நடைமுறையில் பார்ப்போமானால் 2-வது திட்டம் முடிந்த பிறகும் கூட வேலை ஆரம்பிக்கப்படாததுபோல் தெரிகின்றது. இப்படியிருக்க, 20 ஆண்டிற்கு திட்டம் போடப்பட்டிருப்பதாகக் குறிப்பிடப்பட்டுள்ளதைப்பார்த்து கனம் சீனிவாச அய்யர் அவர்கள் குறிப்பிட்டுள்ளது போல் பிள்ளை குட்டி தலைமுறையில்கூட ரோடு வேலை பூர்த்தியாகுமா? என்ற சந்தேகம் வருகின்றது. எனவே, அதிக காலதாமதம் இல்லாமல் விரைவில் முடிக்க ஆவன செய்யவேண்டுமாய்க் கேட்டுக்கொள்கின்றேன். குறிப்பாக செக்காப்பட்டி ரோட்டை 1960-61 ஆண்டில் எப்படியும் எடுத்து வேலை செய்யவேண்டும். இல்லாவிட்டால் வைகையில் பாலம் அமைப்பதற்கு பெரும் தடங்கலாக இருக்கும் என்பதையும் ஞாபக மூட்ட விரும்புகிறேன். வத்தலக்குண்டு பகுதியை எடுத்துக்கொண்டால் அங்கு மின சாரவசதி கொடுக்க sanction ஆகி இருந்தும் கூட இன்னும் வேலை துவங்கவில்லை. ராஜதானிக்கோட்டை, ரங்கப்பநாய்க்கனபட்டி முதலிய ஊர்களுக்கு மின்சாரவசதி அளிக்க உத்திரவு ஆகி இருக்கிறது. Security deposit கட்டி உத்திரவு வாங்கி இருக்கிறார்கள். இருந்தாலும் இன்னும் வேலை துவங்கியபாடு இல்லை. இதற்கு காரணம் சாமான்களை கொண்டுபோக இந்த இடங்களுக்கு சரியான ரோட்டுகள் இல்லை என்று அதிகாரிகள் சொல்லுகிறார்கள். இதே காரணத்தை முன்னிட்டுத்தான் பாலமேடு பகுதியிலும் இன்னும் மின்சார வசதி அளிக்க முடிய வில்லை. கனம் அமைச்சா அவர்கள் அங்கே எல்லாம் சுற்றுப்பிரயாணம் செய்திருக்கிறார்கள். ஆகவே நான் அவருக்கு இந்த பகுதிகளைப் பற்றி அதிகம் சொல்லத்தேவையில்லை என்று நினைக்கிறேன். கிராமங்களுக்கு சரியான ரோட்டுகள் இல்லாத காரணத்தால் கிராமப்புறங்களில் செய்ய வேண்டிய அபிவிருத்தி வேலைகள் தடை படுகின்றன. அதுமட்டும் இல்லாமல் கிராமங்களில் உற்பத்தி ஆகும் கத்தரிக்காய், நெல், கம்பு, சோளம் முதலிய விவசாயப் பொருள்களை வண்டிகளில் ஏற்றி பட்டிணங்களுக்கு கொண்டு வந்து சேர்க்க முடியாத நிலைமை இருக்கிறது. ஆகவே வத்தலக்குண்டு

22nd April 1960] [Srimathi A. S. Ponnammal]

பகுதி அலங்காநல்லூர் பாலமேடு பகுதிகளில் உடனடியாக ரோட்டுகளை அமைக்க ஆவன செய்ய வேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். கிராமப்புறங்களுக்கு ரோட்டு வசதி இருந்தால்தான் மக்கள் உற்சாகத்துடன் உற்பத்தியை பெருக்க முன் வருவார்கள். அடுத்த படியாக பாலங்களைப் பற்றி சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். பல இடங்களில் சிமெண்டு குழாய்ப் பாலங்கள் போடப்பட்டு இருக்கின்றன. பெய்க்கால் பாளையத்தில் இப்படிப்பட்ட ஒரு பாலம் இருக்கிறது. தண்ணிர் அதிகமாய் வந்தபோது இந்த பாலத்தை தூக்கிக்கொண்டு போய் போட்டிருக்கிறது. இதை கனம் அமைச்சர் மாணிக்கவேலு அவர்கள் பார்த்திருக்கிறார்கள். இம்மாதிரி இனிமேல் ஏற்படாமல் பாலங்களை கெட்டியாக இருக்கும்படியாக கட்டவேண்டும். இல்லாவிட்டால் பணம் விரையம்தான் ஆகுமே தவிர அதனால் பொது மக்களுக்கு எவ்வித நன்மையும் ஏற்படாது. கனம் அமைச்சர் அவர்கள் ராமையநாயக்கன்பட்டிக்கு வந்திருந்தார்கள். அங்கே ஒரு பாலம் கட்ட வேண்டுமென்று சொன்னபோது அவர் முடியாது என்று சொன்னார். அவர் நின்று கொண்டு இருக்கும் போதே மக்கள் ஆற்றில் நீந்திக்கொண்டு வந்ததை அவர் பார்த்தார். உடனே இது நியாயமான கோரிக்கை என்று கனம் அமைச்சர் அவர்களே சொன்னார்கள். பிறகு இந்த திட்டத்திற்கு 9 லட்சம் ரூபாய் **Estimate** போட்டு இதில் மூன்று லட்சம் ரூபாய் ஜனங்கள் கொடுக்க வேண்டுமென்று சொன்னார்கள். அங்குள்ள ஜனங்கள் மூன்று நயா பைசா கூட கொடுக்க முடியாத நிலைமையில் இருக்கிறார்கள். அது வறண்ட பகுதி அங்கே சுமார் 30 ஆயிரம் மக்கள் இருக்கின்றனர். இவர்கள் இந்த ஆற்றைக் கடக்காமல் வத்தலக்குண்டுக்கு வரவேண்டுமென்றால் 19 மைல் சுற்றிக்கொண்டு வரவேண்டும் இப்படி சுற்றிப் போக பஸ் வசதியும் இல்லை. இந்த அவல நிலை போக வேண்டும்மென்றால் **1961-62** ஆண்டிலேயே இந்த ராமையநாயக்கன்பட்டி ரங்கப்பநாயக்கன்பட்டி பாலத்தை போட்டால்தான் நன்றாகயிருக்கும் இந்த பணச் செலவை பார்க்காது மக்களின் நலனை கருதி இந்த பாலத்தை போட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். மேலும் இந்த ரோட்டு மிகவும் மோசமான நிலைமையில் இருக்கிறது, அதையும் சரிவர **Repair** செய்து வண்டிப்போக்கு வரத்திற்கு லாயகானதாய் செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். ஆகவே இந்த திட்டத்தை மறு பரிசீலனை செய்து சீக்கிரத்தில் இந்த பாலத்தை அமைத்து தர வேண்டுமென்று அமைச்சர் அவர்களை கேட்டுக் கொள்கிறேன். நிலக்கோட்டை தேவாலை ரோட்டு என்று திட்டத்தில் இருக்கிறது. தேவாலை என் தொகுதியில் இருப்பதாக தெரியவில்லை. அமைச்சர் அவர்கள் இதற்கு விளக்கம் தர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இதோடு தாண்டிக்குடி ரோட் வேலை இன்னும் முடியவில்லை. இந்த ரோட்டுக்கு $21\frac{1}{2}$ லட்சத்திற்குமேல் பணம் செலவாகியும் மீண்டும், மீண்டும் நஷ்டம் ஏற்பட்டுக்கொண்டிருக்கிறது. காரணம் மலையின்மேல் விவசாயம் செய்திருக்கின்ற விவசாயிகள் நிலத்தை ஆக்கிரமித்துக் கொண்டு வருகிறார்கள்.

இந்த நிலத்தை எல்லாம் **eviction** போட்டு எடுத்துக்கொண்டால் தான் இந்த ரோட்டை பாதுகாக்க முடியும் என்றுகூறி என் விவாதத்தை முடித்துக்கொள்கிறேன்.

* **Sri P. S. ELLAPPAN** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இப்போது விவசாயத்திற்கு மூலகாரணம் ஏரி. ஏரிநிரம்பினால்தான் விவசாயம் நல்லபடி நடக்கும். ஆகவே ஏரிகளை ரிப்பேர் பண்ண சர்க்கார் நடவடிக்கை எடுக்குமா ?

**The Hon. Sri P. KAKKAN** : இது ரோட்டுகள் சம்பந்தமான விஷயம்.

[22nd April 1960

**Sri P. S. ELLAPPAN :** அவரவர்கள் தங்கள் ஊர்களுக்கு ரோடு போடவேண்டுமென்று சொன்னார்கள். இப்படியே சொல்லிக்கொண்டு போனால் என்ன ஆவது. (சிரிப்பு) நானும் எங்கள் ஊர்களுக்கும் ரோடு வேண்டுமென்று தான் சொல்ல வேண்டும். இது சம்மந்தமாக பல மனுக்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. எஞ்சினியர் அவர்களுக்கு மனுக்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. எனவே அதன்மேல் நடவடிக்கை எடுத்தால் அதுவே போதும்.

* **Sri S. RAMAKRISHNA THEVAR :** சபாநாயகர் அவர்களே, இப்போது இந்த மானியத்தை ஆதரித்து சிலவார்த்தைகள் சொல்லுகிறேன். அதாவது இந்த மராமத்து இலாக்கா ரொம்ப பெருமைப்படத்தக்க தாயும் போற்றத்தகுந்த முறையில் எல்லாக் காரியங்களையும் செய்து வருகிறது என்பது எல்லோரும் அறிந்த விஷயம். நமது மாநில அமைச்சர்கள் ஒவ்வொரு இடத்திற்கும் இடைவிடாது சென்று பார்த்து ஆங்காங்கு என்னென்ன செய்யவேண்டுமோ அவைகளை மக்கள் இடத்தில் நேரில் தெரிந்துகொண்டு அவைகளை செய்துக்கொண்டு வருகிறார்கள். அதே மாதிரி என் தொகுதியிலும் வந்து பார்த்திருக்கிறார்கள். நமது மராமத்து இலாக்கா அமைச்சர் அவர்கள் சிறிய, சிறிய இடங்களுக்குக்கூட போய் நேரில் நிலைமையை கண்டு அறிந்து வந்திருக்கிறார்கள். இந்த நிலைமையில் என்னுடைய தொகுதி, சீர்கேடான நிலையில் இருக்கிறது என்பது அவர்களுக்கு நான் சொல்லாமலே தெரியும். அப்படி இருக்க இந்த மாநிலத்தில் பலப்பல பகுதிகளுக்கு பணம் ஒதுக்கி இருக்கிறார்கள். என் பகுதியில் தேவக்கோட்டை தேவிப்பட்டினம் ரோடு இருக்கிறது. இந்த ரோடு மிகவும் மோசமான நிலையில் இருக்கிறது. நேரு அவர்கள் விஜயத்தின்போது இந்த ரோட்டு வழியாக அவர் போகவேண்டுமென்று programme போட்டிருந்தார்கள். அது தார் ரோட்டு இல்லை என்ற காரணத்தால் பிற்பாடு அந்த programme ரத்து செய்யப்பட்டது. உடனடியாக போட ஏற்பாடு செய்தார்கள். ஆனால் குறிப்பிட்ட காலத்தில் முடியாது என்று அறிந்து அதை நிறுத்திவிட்டார்கள். அந்த ரோட்டு இன்னும் ரிப்பேர் செய்யப்படவில்லை. இதை உடனடியாக கவனிக்கப்படவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இரண்டாவது திண்டுக்கல்-பட்டாளம் ரோடு பிரிட்டிஷார் காலத்தில் சுமார் 100 வருஷங்களுக்கு முன்னால் போடப்பட்டது. அது மங்களக்குடி வரையில் கப்பிரோட்டாக இருக்கிறது. அதில் இன்னும் எட்டு மைல் கப்பி போடவில்லை. அதன் காரணமாக மக்கள் படாத பாடு படுகிறார்கள். சேதுரஸ்தாவைப் பற்றி கனம் ஸ்ரீனிவாச அய்யர் அவர்கள் விரிவாக சொன்னார்கள். இது 6 ஜில்லாக்களை ஊடுருவிச் செல்கிறது. இது சரியாக இல்லாத காரணத்தால் மீனவர்களும் உணவு தானியம் கொண்டு வருபவரும் படும் கஷ்டத்தைப் பற்றி கடவுள்தான் பார்க்கவேண்டும். ஆனதினால் இது உடனடியாக கவனம் செலுத்தப்பட வேண்டிய ரோடு. 'யானைவரும் பின்னே மணி ஓசைவரும் முன்னே' என்று சொல்வதுபோல் 5 கோடி ரூபாய் திட்டம் எப்போது வருகிறது வருகிறது என்று நாம் எதிர் பார்த்துக்கொண்டு இருக்கிறோம். அது எத்தகைய நிலைமையில் இருக்கிறதென்பதை நமது அரசாங்கம் தாண்டிப் பார்த்து அதிக சீக்கிரத்தில் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலாவது அது நிறைவேற்றப் படவேண்டுமென்று ரொம்ப ஆவலோடு எதிர்ப்பார்க்கிறேன்.

அதற்கு அடுத்தபடியாக என்னுடைய தொகுதியில் நான்கு, ஐந்து மைல் ஆறு மைல், எட்டு மைல் நீளத்திற்குச் சின்னச் சின்ன ரோடுகள் இருக்கின்றன. மெட்டல் ரோடுகளாக இல்லை. அந்தக் காரணத்தினால் பஸ் போக்குவரத்து செய்து கொடுப்பதற்கு முடியவில்லை. சில ரோடுகளையாவது அவசியம் மெட்டல் ரோடுகளாகப் போட்டு பஸ்ரூட்டு கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். கிராமப் பகுதியில் உள்ள மக்களின் நலனை உத்தேசித்து கிராமாந்திர ரோடுகளை நல்ல முறையில் போட்டுக்கொடுப்பதற்கு அதிகப்பணம் ஒதுக்கவேண்டும் என்பது என் ஆசை. கிராமாந்திர ரோடுகள் சரியாக இல்லாத காரணத்தினால் உணவுப் பொருள்கள் வாங்க

22nd April 1960] [Sri S. Ramakrishna Thevar]

சந்தைக்குப் போகவோ வரவோ முடியவில்லை. ஜனங்கள் படுகிறகஷ்டம் சொல்ல முடியாது. சாகுபடி செய்வதிலும் கஷ்டம் ஏற்படுகிறது. எரு கொண்டுபோக, தானியம் எடுத்துவர முடிவதில்லை. குறிப்பாக எங்கள் பகுதியில் மதுரையில் இருந்த தொண்டி, தேவகோட்டை, ராமநாதபுரம் ஆகிய இரு நெடுஞ்சாலைகள்தான் இருக்கின்றன. மற்றபடி பத்து மைல், எட்டு மைல் ரஸ்தாக்கள்தான் ஒரு மைல், இரண்டு மைல் சின்ன ரோடு களும் இருக்கின்றன. ஒன்றை ஒன்று இணைக்க முடியவில்லை. ஆனந்தூர் ரோடு வரவேண்டும் என்று சுமார் 50 ஆயிரம் மக்கள் எதிர்ப்பார்க்கிறார் கள். அந்த ரோடுபோடவேண்டும் என்று பத்துப் பதினைந்து வருஷங் களாகக் கோரி வருகிறார்கள். அதை எப்படியோ செப்பனிட்டுத் தந்தால் விமோசனம் ஏற்படும். திருவாடானை, மங்கலகுடி பக்கம் விவசாயிகள் பெருத்த இடம் ரோடும் 6 மைல் நீளம்தான் போடவேண்டும். அதை யும் சரிப்படுத்திக்கொடுத்தால் விவசாய மக்கள் சந்தைக்குப் போய்வர தானியங்கள் கொண்டுவர மிகுந்த வசதி ஏற்படும். இதுபோல இன்னும் சிறிய சிறிய பாலங்கள் இருக்கின்றன. இவற்றைப்பற்றி நான் சொல்லா மலே அமைச்சர் அவர்கள் அறிவார்கள்.

அதோடு தேவிபட்டணம், தேவக்கோட்டை ரோடு பூராவும் சரியான முறையில் செப்பனிடப்படும் என்று நினைத்தோம். ஆனால் இங்கே சொல்ல படுவதில் இருந்து 18 மைல் நீளம்தான் செப்பனிட சாங்ஷன் ஆகியிருப் பதாகத் தெரிகிறது. இதனால் எதிர்ப்பார்த்த முழுப்பயனும் கிடைக்காது. ஆகவே அந்த ரோடு முழுமையும் சரிப்படுத்திக்கொடுக்கவேண்டுமாய் கேட்டுக் கொள்கிறேன். இன்னும் மீனவர்கள் வாழ்கிற பகுதியில் ஒரு மைல், இரண்டு மைல் என்று சின்ன சின்ன ரோடுகள் எல்லாம் போட்டு நெடுஞ் சாலைகளோடு சேர்க்கிறார்கள். சேது ரஸ்தாவாகிய நெடுஞ்சாலையே எங்கள் பக்கத்தில் செப்பனிடப்படாதபோது, இப்படிச் செலவிடுகிற பணம் வீண் தான். ஆகவே சேது ரஸ்தாவையும் செப்பனிட்டுச் சிறிய ரோடுகளை இணைத்து தரவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொண்டு என் பேச்சை முடித்துக் கொள் கிறேன்.

* SRI K. S. ARDHANAREESWARA GOUNDER: கனம் அவைத்தலைவர் அவர்களே, நமது மராமத்து அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கக்கூடிய இந்த மானியத்தை ஆதரித்துச் சில வார்த்தைகள் பேசுகின்றேன். குறிப்பாக அமைச்சர் அவர்கள் இந்த நிர்வாகத்தை ஏற்றுக்கொண்ட பிறகு மேட்டூரில் இருந்து கொளத்தூருக்கு, ஆறு மாதம் போக்குவரத்து இல்லாமல் இருக்கக்கூடிய நிலைமையை மாற்றி அமைக்க, 2 பாலங்கள் கட்டி போக்குவரத்தை நல்ல முறையில் ஏற்படுத்திக்கொடுத்த தற்காக நான் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, அதே ரஸ்தா மைசூர் வரையிலும் விஸ்தரிக்கவேண்டு மென்று கேட்டுக்கொண்டிருக்கிறோம். மைசூர் சர்க்காரிலே அவர்கள் எல்லையில் இருந்து ரஸ்தா போட்டுக்கொண்டிருக்கிறார்கள். இன்னும் நம் மாகாணத்தில் பத்து மைல் ரஸ்தா போட்டுவிட்டால், சேலத்தில் இருந்து மைசூருக்கு நூறு மைல் குறைகிறது என்பதை அமைச்சர் அவர்கள் கவனத்திற்குக்கொண்டுவர விரும்புகிறேன். அது இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறது. இப்போது கேட்டால் இதற்குப் பணம் இல்லையென்று சொல்கிறார்கள். உடனடியாக ஸி.ஆர்.எப். இல் இருந் தாவது பணம் எடுத்து இந்த ரோட்டை அமைச்சர் அவர்கள் போட்டுத் தரவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன். இதனால் நம் ராஜ்யத் திற்கும் மைசூருக்கும் நல்ல இணைப்பு இருக்கிறது என்று வலியுறுத்த விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, மேட்டூரில் இருந்து அதே ரஸ்தா டவுன்ஷிப் கமிட்டி யில் இருக்கிறது. அதை ஹைவேசாக மாற்றவேண்டும் என்று பலகால மாக வற்புறுத்தி வருகிறோம். அவர்கள் அதை நல்லமுறையில் பழுது பார்ப்பதில்லை. ஆகவே அந்த ரஸ்தாவை உடனடியாக ஹைவேசாக மாற்ற வேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

[Sri K. S. Ardhanareeswara Gounder] [22nd April 1960

அடுத்தபடியாக, பவானியில் இருந்து தொப்பூ வரையில் போகக்கூடிய ரஸ்தா ஸ்டேட் ஹைவேசாக இருக்கிறது. அதை நாஷனல் ஹைவேசாக மாற்றவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, மேட்டூர் கால்வாய் பகுதியில் உள்ள ரஸ்தாக்கள் நீர் தேங்கி ரோடு இருக்கிற இடமே தெரியாமல் இருக்கிறது. இதனால் போக்கு வரத்து பெரிதும் பாதிக்கப்படுகிறது. இந்த ரோடுகளை ஹைவேஸ் மராமத்து செய்வதா, இர்ரிகேஷன் டிபார்டுமெண்ட் செய்வதா என்கிற பிரச்னையில் யாரும் எதுவும் செய்யாமல் இருக்கிறார்கள். இரண்டு இலாகாவும் ஒரே அமைச்சரிடம் இருப்பதால், லோயர் பவானி ஏரியாவில் இதை எப்படிச் செப்பனிட்டு இருக்கிறார்களோ அதுபோலவே இங்கும் செப்பனிட்டுத் தரும் படியாகக் கேட்டுக்கொள்கிறேன். இல்லாவிட்டால் விவசாயம், வியாபாரம், போக்குவரத்து எல்லாமே பாதிக்கப்படும். ஆகவே உடனடியாக இதற்கு வேண்டிய தொகை ஒதுக்கி இதை மராமத்து செய்து கொடுக்கும்படியாகக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, மத்திய சர்க்கார் போக்குவரத்து மந்திரி பவானிக்கும், மேட்டூருக்கும் நடுவில் காவேரிக்கு பாலம் கட்ட ஒரு திட்டத்தை அமைத்து நமது சர்க்கார் அனுப்பினால் அதைப் பரிசீலனை செய்து பணம் ஒதுக்கி கட்டித்தருவதாகச் சொல்கிறார்கள். ஆனால் இங்கிருந்து தான் திட்டம் எதுவும் தயாரித்துப் போகவில்லை என்று தெரிகிறது. உடனடியாக இந்தப் பாலத்தை அமைப்பதற்கு வேண்டிய திட்டத்தைத் தயார் செய்து அனுப்பு மாறு அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, மேட்டூர் கால்வாயில் சேலம் ஜில்லாவிற்கு தண்ணீர் கொண்டுபோக சர்க்கார் ஒரு பாலம் கட்டியிருக்கிறார்கள். ஆனால் அதில் மராமத்து இலாகாவினர் தான் போகலாம், என்று எழுதி வைத்து சங்கிலி போட்டு தடை செய்திருக்கிறார்கள். இது சரியல்ல. பொதுமக்களும் உப யோகப்படுத்திக்கொள்ள அனுமதி அளித்து சங்கிலியை எடுத்து விட வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். மேலும் அந்த ரோட்டையும் கப்பி ரஸ்தாவாகப் போட்டுக்கொடுக்கவேண்டும். அப்போதுதான் விவ சாயத்திற்கும் அந்தச் சாலை மிகவும் உபயோகமாக இருக்குமென்று தெரி வித்துகொள்கிறேன்.

மேலும் என்னுடைய தொகுதியில் சமுதாய வளர்ச்சித் திட்டத்தின் கீழ் 60 மைல்கள் நீளமுள்ள ரஸ்தா போடப்பட்டது. இதற்கு உள்ள நிலங்களை எல்லாம் இனமாக வாங்கிக்கொடுத்திருக்கிறோம். அப்படி இருந் தும் போட்ட ரஸ்தாவை சரிசெய்யாத காரணத்தினால் அவை வீணாகிறது. உடனே தக்கதொகையை ஒதுக்கி அவற்றை சரியான முறையில் கப்பிபோட்டுத் தரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். நம் மாகாணத்தில் அதிக போக்குவரத்து நடைபெறவேண்டுமென்றால் நம் மாகாண சர்க்கார் அதிகத் தொகை ஒதுக்கி ரஸ்தாக்களை செப்பனிடவேண்டும். ஆனால் மத்திய சர்க்கார் அமைச்சர்கள் இங்கே ஹைவேஸ் ரஸ்தாக்களில் பிராயணம் செய்துவிட்டு ரோடுகள் நல்லமுறையில் இருப்பதாகச் சொல்லி பணம் குறைத்துவரு கிறார்கள். இனி அவர்கள் வரும்போது கிராம ரோடுகளில் அழைத்துச் செல்லவேண்டும். அப்போதுதான் இந்த ரோடுகளின் மோசமான நிலையை அவர்களால் உணர்ந்துகொள்ள முடியும். எப்படியாவது அவர்களிடம் இருந்தும் அதிகத் தொகையைப் பெற்று இந்த ரோடுகளை நல்ல முறையில் செப்பனிடுவதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளவேண்டும்
10-30 a.m. என்று கேட்டுக்கொள்கிறேன். பெருவழி சாலைகளை நல்ல முறையில் பாது காக்க வேண்டும் என்றால் மத்திய சர்க்கார் நிதி வந்தால்தான் முடியும். காலம் தவறி வருவதால் அதை செலவழிப்பதிலேகூட கஷ்டமாக இருக் கிறது. ஆகையால் இன்னும் அதிகமான பணத்தை பெற்று பெருவழி சாலைகளை எல்லாம் நல்ல முறையில் வைக்கவேண்டுமென்றால் இன்னும் மத்திய சர்க்காரிடத்தில் இருந்து நிதி வந்தால்தான் முடியும் என்பதை நாம் பார்க்கிறோம். நம்முடைய நேஷனல் ஹைவேஸ் ரஸ்தாக்கள் எல்லாம் சென்ற இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன்னால் இருந்ததற்கும், இந்த

22nd April 1960] [Sri K. S. Ardhanareeswara Gounder]

ஆண்டு இருப்பதற்கும் பார்த்தால் இந்த ஆண்டு தரம் குறைந்திருக்கிறது என்பதுதான் என்னுடைய அபிப்பிராயம். மத்திய அரசாங்கம் பணம் குறைவாக கொடுப்பதால் தரம் குறையக் கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. உடனடியாக இந்த ரஸ்தாவை அதே நிலைமையில் நிலை நிறுத்த வேண்டுமென்றால் அதிக பணம் தேவையாய் இருக்கிறதென்று தெரிவித்து கொள்கிறேன்.

இப்போது நமது சபையிலே தலைவராக இருக்கக் கூடியவர்கள் "அமைச்சர் அவர்கள் வரும்போதுதான் சுண்ணாம்பு அடிக்கிறார்கள்" என்று சொன்னார்கள். அதெல்லாம் மலையேறிப்போய்விட்டது.

TEMPORARY CHAIRMAN (Sri A. Govindasamy) : தலைவரை இந்த சந்தர்ப்பத்தில் ஈடுபடுத்திப் பேசக்கூடாது. தலைவர் உட்கார்ந்து இருக்கிற இடத்திற்குப் போன பிறகு வேண்டுமானால் குறிப்பிட்டுப் பேசலாம். இப்போது தற்காலிகமாக தலைமை தாங்குகிற போது குறிப்பிட்டு பேசுவது முறை அல்ல.

SRI K. S. ARDHANAREESWARA GOUNDER : அதற்காகத் தான் கனம் அங்கத்தினர் விநாயகம் அவர்கள் இந்தப் பிரச்னையைக் குறித்து . . . . . . . . .

TEMPORARY CHAIRMAN (Sri A. Govindasamy) : கனம் அங்கத்தினர் விநாயகம் அவர்கள் எழுப்பிய பிரச்னைக்கும் இதற்கும் சம்பந்தம் இல்லை. நான் கூறிய தீர்ப்பையே அங்கத்தினர் அவர்கள் ஏற்றுக்கொள்ளாத முறையில் தொடர்ந்து பேசுவதாக இருக்கிறது. வெட்டு பிரேரபணையைக் கொடுத்தவர் பேசாத நேரத்தில் தலைமை வகிக்கலாம் என்பதை நான் பூர்ணமாக அறிந்துகொண்டுதான் இந்தத் தீர்ப்பை அளித்தேன் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI K. S. ARDHANAREESWARA GOUNDER : கனம் அமைச்சர் அவர்கள் போகும்போது மட்டும் சுண்ணாம்பு அடிப்பது என்பது கிடையாது. எப்போது கலர் குறைகிறதோ அப்பொழுது சுண்ணாம்பு அடித்துக்கொண்டுதான் இருக்கிறார்கள். அங்கங்கே நல்ல நீண்ட சாலைகளை எல்லாம் ஏற்படுத்தியிருக்கிறார்கள். வேகமாகப் போகக்கூடிய போக்குவரத்து நல்ல முறையிலே செல்லுவதற்கு அதற்குத் தகுந்த முறையில் சிக்னல்கள் போட்டு கற்களுக்கு சுண்ணாம்பு அடிக்கப்பட்டிருப்பதை உணரவேண்டும். இப்போது இருக்கும் அதிகாரிகள் அமைச்சர் அவர்களுக்கு மட்டும் அல்ல பொது ஜனங்களுக்கு பணி செய்யவேண்டும் என்ற முறையிலே நன்றாக பணியாற்றி வருகிறார்கள் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அவர்களை நாம் பாராட்டவேண்டும். ஏனென்றால் நம்முடைய மாகாணத்தில் இருக்கும் அதிகாரிகள் ரஸ்தாவிற்குப் பொறுப்பாக இருக்கக்கூடியவர்கள் அனைவரும் நல்ல முறையில் ரஸ்தாக்களை அமைத்திருக்கிறார்கள் என்பதை நான் மிகவும் வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன்.

பவானி ஆற்றுக்கும், காவேரி ஆற்றுக்கும் போட்டிருக்கும் இரண்டு பாலங்கள் மிகக் குருகலாக இருக்கின்றன. நெடுநாட்களுக்கு முன்பே கட்டப்பட்ட காரணத்தால் அகலம் குறைச்சலாக இருக்கிறது. அதனால் போக்குவரத்திற்கு மிகவும் இடைஞ்சலாக இருக்கிறது. போக்குவரத்து நல்லமுறையிலேயே நடத்தவேண்டுமென்றால் இந்தப் பாலங்களை இன்னும் 10 அடி அகலப்படுத்தவேண்டும். இப்போது அங்கே ஒரு பாலம்தான் இருப்பதால் அதை அகலப்படுத்துவதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்பது முடியாமல் இருக்கிறது. ஆனால் தற்போது பள்ளிப் பாளையத்தில் இருந்து ஈரோட்டுக்கு போகும் பாலம் கூடியவிரைவில் முடிவடையும் தருவாயில் இருக்கிறது. அதற்குள்ளாக திட்டம் தயார் செய்து பவானி பாலத்தை அடுத்த ஆண்டிலேயே இன்னும் விரிவடைய வழி வகைகளை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

[22nd April 1960

*SRI K. R. NALLASIVAM: கனம் சபைத் தலைவர் அவர்களே எங்கள் தொகுதியிலே சில குறிப்பிட்ட விஷயங்களைப் பற்றி இந்தச் சந்தர்ப்பத்திலே கனம் அமைச்சரின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். ஈரோட்டு தாலூகாவிலும், கோபி தாலூகாவிலும் எங்கே கீழ் பவானி வாய்க்கால் போகிறதோ அங்கே எல்லாம் ரோட்டுகள் போக்குவரத்து லாயக்கற்று அழிந்துகொண்டிருக்கின்றன. அங்கு எல்லாம் பெருவழிச் சாலைகளும் மாவட்ட சாலைகளும் அங்கங்கே சீர்குலைந்து போய்விட்டன. அவை இன்னும் கவனிக்கப்படாமல் ரோட்டுகள் இருந்த இடமே தெரியாத அளவிற்கு அடியோடு நாசமாகிவிடுமோ என்று நான் பயப்படுகிறேன். அந்த அளவிற்கு பல ரோட்டுகளில் பஸ் போக்குவரத்து நடந்துகொண்டிருக்கிறது. பஸ் போக்குவரத்து இருக்கும் இடங்களில் ரோட்டுகள் ரிப்பேர் செய்யப்படவேண்டும். ஆனால் அங்கு ரிப்பேர் செய்யப்படுவது கிடையாது. காரணம் என்னவென்று விசாரித்தால் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் சொல்லுகிறார்கள், அவைகளை ரிப்பேர் செய்வதற்கு சரியான கான்ட்ராக்டர்கள் கிடைப்பதில்லை என்று. கன்ட்ராக்டர்கள் கிடைக்காததற்குக் காரணம், பாசன பிரதேசமானதால் கூலி ஆட்கள் ஒழுங்காக கிடைப்பதில்லை என்று சொல்லப்படுகிறது. குறைந்த அளவிற்கு கான்ட்ராக்ட் எடுத்துச் செய்யக் கூடிய கன்ட்ராக்டர்கள் கிடைப்பதில்லை. ஆகையால் சர்க்காரைப் பொறுத்த வரையில் இந்த வட்டாரத்தில் உள்ள ரோட்டு வேலைகளுக்கு சற்று அதிகமாக எஸ்டிமேட் போடுவதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். அப்போதுதான் அங்கு இருக்கும் ரோட்டு வேலைகள் ஒழுங்காக நடக்கும் என்று நினைக்கிறேன்.

பஸ் போக்குவரத்து ஏராளமாக அங்கு பெருகி வருகிறது. இதன் விளைவாக அடிக்கடி ரோட்டுகள் ரிப்பேர் செய்யவேண்டியிருப்பதால அவைகளை அடிக்கடி கவனிக்கப்படவேண்டும். கொடுமுடியிலிருந்து சென்னிமலை, ஈரோட்டிலிருந்து புதூர்க்குப் போகும் ரோடுகள் தினசரி சீர்குலைந்து கொண்டிருக்கின்றன. கடந்த 4, 5 ஆண்டுகளாக முயற்சி எடுத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் ஒழுங்கான முறையில் கான்ட்ராக்ட் கிடைக்காததன் காரணமாக வேலை ஆரம்பிக்காமலேயே இருக்கிறது. பட்ஜட்டிலே தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது. இருந்தாலும் வேலை இன்னும் ஆரம்பிக்கப்படாமல் இருப்பதனால், இதை கவனித்துச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இந்தத் தாலூகாவில் இருக்கும் சில ஓடைகளுக்கு மூழ்குபாலங்கள் போடப்பட்டிருக்கின்றன. அவைகள் அந்தக் காலத்தில் போடப்பட்ட பாலங்கள். நீர்கசிவுத் தண்ணீர் வரும்போதெல்லாம் இந்தப் பாலங்கள் பாசி பிடிக்கின்றன. அங்கே வண்டிகள் வேறு வாகனங்கள் போகின்றன. கால்நடைகள் போகும்போது வழுக்கி வீழ்ந்து கால் ஒடிந்து போகின்றன. மனிதர்கள் பல பேர் வீழ்ந்து அடிப்பட்டிருக்கிறார்கள். இதுபோன்று 10 பாலங்கள் ஈரோடு தாலூகாவில் இருக்கின்றன என்று நினைக்கிறேன். கனம் அமைச்சர் அவர்கள் வந்திருந்தபோது நேரிலும், அதிகாரிகளிடத்திலும் விண்ணப்பம் கொடுத்தும் அவர்கள் இன்னும் கவனிக்கவில்லை. பாலங்கள் பூராவும் கவனித்து மாற்றி அமைக்கவேண்டிய அவசியம் இருக்கிறது. குறிப்பிட்ட இடத்தில் ஆங்காங்கே குழாய்கள் பதித்துவிடுவதால் சாதாரணமாக தண்ணீர் வரும்போது கீழே போகும். அதிகமாக தண்ணீர் வரும்போது மேலே போகும். நிச்சயமாக வழக்கல் ஏற்பட இடம் இருக்காது. இப்போது ஓடைகளில் உள்ள பாலங்களிலும், ரோடுகளிலும், பாரவண்டிகள் போகமுடியாத நிர்ப்பந்தம் ஏற்பட்டு இருக்கிறது. இதை நல்ல முறையில் கவனிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

'பல இடங்களில் ஊற்றுத் தண்ணீர் வந்த பிறகு பாலம் கட்டப்பட்டது. இந்த அடிப்படையே மிகவும் தவறு. இதற்கு முன்னால் இருந்த ஹைவேஸ் என்ஜினியர் சிறு பாலங்கள் கட்டுவதற்கும், மதகுகள் கட்டுவதற்கும் பெரிய சிமெண்ட் குழாய்கள் லட்சக்கணக்கான ரூபாய்களுக்கு வாங்கி போட்டுவிட்டு போய்விட்டார்கள். இதன் விளைவு இங்கு இருக்கும் ஹைவேஸ் என்ஜினியர்களும், ஜனங்களும் அனுபவிக்கவேண்டியதாயிருக்கிறது. சிறிய பாலங்கள்

22nd April 1960] [Sri K. R. Nallasivam]

சட்டுவதாக இருந்தால் சிமெண்டு குழாய்களை போட்டு சிறு பாலங்கள் கட்டி விடலாம். பெரிய பாலங்கள் கட்டுவதென்றால் 50 ஆயிரம் ஒரு லட்சம் ரூபாய் போட்டு கட்டவேண்டிய பாலங்கள் இந்த சிமெண்டு குழாய்களை வைத்து கட்டுவதனால் மழை அதிகமாக பெய்து தண்ணீர் ஏராளமாக வரும்போது குழாய்களும் பாலங்களும் அடியோடு அடித்துக் கொண்டு போய்விடுகின்றன. பல இடங்களில் அம்மாதிரி நடந்து இருக்கின்றன. இதற்கு உதாரணம் கொடுக்கவும் முடியும். உதாரணமாக ஊஞ்சலூரில் இருந்து சிவகிரி போக சுமார் 30 ஆயிரம் ரூபாய்க்கு எஸ்டிமேட் போட்டு சிமெண்டு குழாய்கள் வைத்துக் கட்டப்பட்டது.

அது, மூன்று வருடங்களுக்கு முன்பு கட்டப்பட்டது. கட்டிய வருடத்திலேயே மழைபெய்து, நீர்க்கசிவுத் தண்ணீர் வந்து அந்தப் பாலத்தையே ஒரு புரட்டு புரட்டிப் போட்டுவிட்டது. அங்கே அதனால் போக்குவரத்தும் இல்லை. அது ஒரு பெரிய ஓடை மாதிரித்தான் இருக்கிறது. ஆகவே, அதனால் ஐந்து மைல்கள் சுற்றி வரவேண்டியிருக்கிறது. அதேபோல, சொம்பனைப் பாலத்திற்கும் குழாய் போட்டுக்கட்டினார்கள். அதுவும் தூக்கக் கொண்டு போய்விட்டது. ஆகவே, சிறிய பாலமாக இருந்தாலும் குழாய் வைத்துக் கட்டாமல் சிறிய பாலங்களை கட்டுவதனால் சர்க்காருக்கு எந்தவித நஷ்டமும் வராது. முன்பு எஞ்ஜின்களை வாங்கிப் போட்டு விட்டு போய்விட்டார்களே ஆகவே அதைப் பயன்படுத்த வேண்டுமென்று குழாய் வைத்து கட்டினால் அது திரும்பத் திரும்ப பாழாகி, அதனால் சர்க்காருக்கும் நஷ்டம், பொதுமக்களுக்கும் கஷ்டம் என்ற நிலையைத்தான் ஏற்படுத்தும். ஆகவே, முன்பே அதை வாங்கி வைத்துப் போய்விட்டார்களே, அதைப் பயன்படுத்த வேண்டுமென்ற காரணத்திற்காக குழாய் பாலங்கள் அமைக்காதீர்கள் என்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக, பெருவழித்துறையில் இருக்கும் கடைநிலை ஊழியர்களைப் பொறுத்தவரையில் அவர்களது வேலைக்கு நிச்சயமில்லை பாதுகாப்பு தேவை. இரண்டு வருடங்கள் அவர்கள் வேலையில் இருந்தாலும்கூட அவர்கள் நிரந்தரமாக்கப்படுவது கிடையாது. அவர்கள் செய்யும் ஊழியத்திற்கு அவர்களுக்கு கொடுக்கப்படும் சம்பளம் மிகக் குறைவு. அவர்கள் காலையில் 9 மணிக்கு வேலைக்கு சென்றால் இரவு ஆறு மணிக்குத்தான் திரும்புகிறார்கள். அவர்கள் சம்பளம் மிக குறைவாகயிருக்கிறது. அவர்களை நிரந்தரமாக்குவது கிடையாது. ஒன்று, அவர்கள் அடிப்படைச் சம்பளத்தை உயர்த்த வேண்டும், இரண்டாவது, அவர்கள் இரண்டு வருடங்கள் தொடர்ந்து வேலை செய்தால் அவர்கள் நிரந்தரமாக்கப்படவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். கடைசியாக, தஞ்சாவூர் ஜில்லாவில் உள்ளவர்கள் ஐந்து வருடங்களாக பாமினி ஆற்றிற்கு ஒரு பாலம் கட்ட வேண்டுமென்று கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். அதையும் கவனித்து உடனடியாக செய்து கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு நான் எனது உரையை முடித்துக்கொள்கிறேன்.

* SRI V. K. KOTHANDARAMAN : ஸார், இந்த வெட்டுப் பிரேரணையை ஆதரித்து நான் ஒரு சில விஷயங்கள் குறிப்பிட விரும்புகிறேன். ரோடு என்பது மிக மிக முக்கியமானதொன்றாகும். அதிலும் குறிப்பாக கிராமத்திற்கு கிராமம் ரோடுகள் இருப்பது கிராமத்திற்கு கிராமம் தொடர்பு வைத்துக்கொள்வதற்கு சாதகமான ஒரு விஷயமாகும். ஆகவே இன்று ஏராளமாக கிராமங்களுக்கு ரோடு இல்லாததின் காரணமாக கிராம மக்கள் பெரும் அளவில் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்பதை நான் சொல்லத் தேவையில்லை. இது, அமைச்சர் அவர்களுக்குத் தெரிந்த விஷயந்தான். அதேபோன்று இது எல்லா அங்கத்தினர்களுக்கும் தெரிந்த விஷயந்தான். இன்று கிராமங்களில் இருக்கக்கூடியவர்களில் அநேகம் பேர்கள் குடிசைகள் போட்டுக்கொண்டு வாழக்கூடியவர்கள்தான். அதிலும் குறிப்பாக தாழ்த்தப்பட்ட மக்கள் வசிக்கும் இடங்களில் குடிசைகள்தான் பெரும்பாலும் இருக்கும். ஆகவே, இந்த கோடைகாலத்தில் அக்குடிசைகளில் தீப் பிடித்துக்கொண்டால் அந்தத் தீயை அணைப்பதற்கு தீ அணைக்கும் இயந்திரங்கள் அல்லது மோட்டார்கள் இவைகள் அந்தக் கிராமங்களுக்குக் வருவதற்குக்கூட வசதியில்லை. ஆகவே

தீயை அணைத்து பிறகு சாம்பலின் பேரில் தண்ணீர் விட வேண்டிய நிலை தான் இருக்கிறது இன்று. ஆகவே, கிராமங்களுக்கு நாம் உடனடியாக ரோடுகள் போடவில்லை என்று சொன்னால் கிராமங்களுக்கு நாம் நல்லது செய்தவர்கள் ஆக முடியாது. ஆகவே அதற்காக எவ்வளவு பணம் செலவானாலும்கூட உடனடியாக ரோடு வசதி செய்து கொடுக்க வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன். அதேபோன்று எனது தொகுதியாகிய குடியாத்தத்தை அடுத்தாற்போல் அறவட்லா என்ற மலை இருக்கிறது. அங்கு நான்கு கிராமங்கள் இருக்கின்றன. மற்ற ஊர்களுக்கு செல்ல வேண்டுமென்றால் ஏழு மைல்கள் அங்கிருந்து நடந்து வர வேண்டியிருக்கிறது. அங்கு யாருக்காவது வியாதி பீடிக்கப்பட்டால் அல்லது அங்கு உற்பத்தி செய்யப்படும் பொருள்களை கீழே கொண்டு வருவது என்றால், வியாதியஸ்தரை கட்டிலில் வைத்துத்தான் கொண்டுவர வேண்டும். அங்கு விளையக்கூடிய பொருள்களை கீழே கொண்டு வர வேண்டுமென்றால் அல்லது கீழேயிருந்து பொருள்களை மேலே கொண்டு வர வேண்டுமென்றாலும், கழுதைகளின் மேல் வைத்துத்தான் ஏற்றுமதி இறக்குமதி செய்ய வேண்டிய நிலை இருக்கிறது. இன்றும் கூட இப்படிப்பட்ட நிலை இருப்பது என்பது மிகவும் வருந்தத்தக்கதாகும். காடுகளை காண்ட்ராக்ட் எடுத்திருக்கும் காண்ட்ராக்டர்கள் அவர்கள் சுயநலத்தை யொட்டி பத்தாயிரக்கணக்கில் செலவு செய்து ரோடுகள் போட்டிருக்கிறார்கள் என்று சொன்னாலும், அங்கு வண்டி போக முடியாத நிலையில்தான் இருக்கிறது. ஆகவே, தயவு செய்து அங்கு ஒரு மெட்டல் ரோடு போடுவதற்கான ஏற்பாடுகளை உடனடியாக செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பின், பல கிராமங்களிலும் அந்த கிராம மக்கள் ரோடு போட பணம் கொடுப்பதற்கு முன்னுக்கு வந்தபோதிலும்கூட, ஒரு பர்லாங் அல்லது இரண்டு பர்லாங் என்றிருந்த போதிலும்கூட, அதற்கு நிலம் எடுக்க முடியாத அளவிற்கு தகராறு இருக்கிறது. ஆகவே ரோடு மிகவும் அத்தியாவசியமானது என்பதை உணர்ந்து அந்த நிலத்தை எடுப்பதற்கு, சட்டத்திலிருந்து விதிவிலக்கு கொடுத்து, உடனடியாக அந்த நிலத்தை எடுப்பதற்கு சட்டப்படி என்னென்ன சடங்குகள் செய்ய வேண்டுமோ அவைகளை ஒன்றும் எதிர்பாராது, ரோடு மிகவும் அத்தியாவசியமாக இருப்பதால், அத்தியாவசியமான காரியங்களுக்காக எப்படி சர்க்கார் நிலம் எடுக்கிறார்களோ, ரெயில்வேக்காக எப்படி நிலம் எடுக்கிறார்களோ, அப்படி எடுத்து அதை உடனடியாக செய்து கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். குறிப்பாக எனது தொகுதியில் மாச்சம்பட்டு என்ற கிராமத்தில் ஒரு ரோடு போட, ஒரு பர்லாங், கேட்டு வருகிறார்கள். அதற்கு 600 ரூபாய் டெப்பாஸிட்டும் கொடுத்திருக்கிறார்கள். அதை பரிசீலனை செய்து ரோடு போடலாம் என்று முடிவு செய்தும்கூட காலதாமதம் செய்யப்பட்டு வருகிறது. அதை உடனடியாக கவனித்து அந்த ரோடையும் போடவேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன். ரோடு வசதியுள்ள கிராமங்களுக்குத்தான் அமைச்சர்கள் செல்லும் நிலை இருக்கிறதே தவிர ரோடு வசதியில்லாத கிராமங்களுக்கு போக முடியாத நிலைதான் இன்று இருக்கிறது என்பதை நான் இந்தயிடத்தில் குறிப்பிட ஆசைப்படுகிறேன். அறவட்லா, மோர்டாணு போன்ற இடங்களுக்கு அமைச்சர்கள் போய் இருக்க முடியாது. அங்கு ரோடுகள் கிடையாது என்பதல்லாமல் பள்ளங்களில் மண்ணைப் போட்டு நிரப்பியிருப்பார்கள். எனக்கு முன் பேசிய அர்த்தநாரீஸ்வரர் அவர்கள் மறுத்து சொன்னார்கள், அமைச்சர்கள் வரும்போதுதான் ரோடு போடுகிறார்கள், வெள்ளையடிக்கிறார்கள் என்பதை.

THE HON. SRI P. KAKKAN : அவர்கள் அப்படி சொல்லவில்லை. வேறு ஒருவர்தான் அப்படிச் சொன்னார்.

SRI V. K. KOTHANDARAMAN : அமைச்சர் அவர்களுக்கும் இது தெரியும். முழு பூசனிக்காயை சோற்றில் அடைக்க முடியாது. அமைச்சர்கள் வரும்போது எல்லாம் செய்கிறார்கள். ஆகவேதான் ஊட்டியில் சட்டசபையை நடத்தவேண்டுமென்று கேட்டார்கள். இந்த ரோடு வசதியை உடனடியாக கவனிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

**22nd April 1960]** **[Sri V. K. Kothandaraman]**

அதேபோல் சேதுசமுத்திரத் திட்டத்தை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நிறைவேற்றுவதாக இருந்தது. ஆனால் அதை இப்பொழுது ஆரம்பிக்கவில்லை என்று சொன்னாலும் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலாவது அதை உடனடியாக ஆரம்பிப்பதற்கு முயற்சி செய்தாகவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இன்று பம்பாயிலிருந்து சென்னைக்கு வருவது அல்லது மற்றயிடங்களிலிருந்து வருவதாகயிருந்தாலும் பல தினங்களாகிறது. ஆகவே இந்த சேதுசமுத்திர திட்டத்தை நிறைவேற்றுவதன் மூலம் வியாபாரிகளுக்கு கோடிக்கணக்கான ரூபாய் மிச்சப்படும் நிலை இருக்கிறது என்ற முக்கியத்துவத்தை உணர்ந்து அதை நிறைவேற்ற வேண்டும். அடுத்தாற்போல் தூத்துக்குடி ஹார்பர் திட்டத்தை இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்திலேயே நிறைவேற்றுவதாகயிருந்தது. அதையும் உடனடியாக ஆரம்பிப்பதற்கு போதிய கவனம் செலுத்தப்பட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பின், கிழக்கு கடற்படைக்கு பாதுகாப்பில்லை. ஆகவே, அங்கு மூன்றாவது திட்டத்தில் கடற்படை படைத் தளம் ஏற்படுத்த ஏற்பாடு செய்யவேண்டும் என்று இந்த சந்தர்ப்பத்தில் தெரிவித்துக்கொள்ள ஆசைப்படுகிறேன். அதே போல் தூத்துக்குடியில் கப்பல் கட்டும் தளம், போட் கட்டும் தளம் இவைகளை எல்லாம் ஏற்படுத்தவேண்டும். இங்கிலாந்திலிருந்து ஒரு நிபுணர் கோஷ்டி வந்தது. அந்தக் கோஷ்டிகூட அது கப்பல் கட்டும் தளத்திற்கு மிக வசதியான நல்ல இடமாகும் என்று சிபார்சு செய்திருக்கிறார்கள். கடைசியாக இன்றைக்கு கடல் வளத்தைப் பற்றி பரிபூர்ணமாக தெரிந்துகொள்ளவேண்டுமென்றால் அதுபற்றி கல்லூரி மாணவர்களுக்கு போதிய பயிற்சிக்கான ஏற்பாடுகளை செய்தாக வேண்டும். அப்படி ஒவ்வொரு கல்லூரியிலும் ஏற்பாடு செய்தால் மிக நன்றாகயிருக்கும் என்றும் சொல்லிக்கொள்கிறேன்.

இதே போன்று ரோடு இன்ஸ்பெக்டர்களை போட்டுவிட்டு, ஒவ்வொருவருக்கும் 15 மைல்கள் 20 மைல்கள் என்று கொடுத்து, அதிலுள்ள மரங்கள் ஒன்றும் வெட்டக்கூடாது என்றும், அவைகளை எல்லாம் பாதுகாக்க வேண்டும் என்றும் இவர்களை நியமித்திருக்கிறார்கள். ஆனால் இவ்விதம் ரோடு இன்ஸ்பெக்டர்களை போட்டு, அதே நேரத்தில் அவர்கள் மேல் இருக்கின்ற ஆபீசர்கள் அன்-அபிஷியலாக இவர்களை எடுபிடி வேலைக்கு வைத்துக்கொள்வதால் இவர்களால் சரியாக பாதைகளிலுள்ள மரங்களை பாதுகாக்க முடிவதில்லை. இதன் காரணமாகத்தான் ரோட் டோரங்களில் உள்ள மரங்களும் ரோடு அருகில் வைத்திருக்கும் தார்கள், தார்-ட்ரம்கள் இவைகள் எல்லாம் திருடு போகக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. குறிப்பாக சமீபத்தில் செங்கல்பட்டு வட்டாரத்தில் ஆயிரம் ரூபாய் பெறுமான தார் திருடு போய் இருப்பதாக தெரிகிறது. இது விசாரணையில் இருக்கிறது என்று நினைக்கிறேன். இது போன்று அடிக்கடி பல ஊழல்கள் நடக்கின்றன. நிர்வாகத்தில் திறமைக் குறைவு இருக்கக் கூடாது என்பதற்காகத்தான் பல அதிகாரிகளையும் நாம் நியமிக்கிறோம்.

**THE HON. SRI P. KAKKAN :** செங்கல்பட்டு மாவட்டத்தில் இந்த மாதிரி தார் திருடு போயிருப்பது எந்த இடத்தில், எந்த ஊரில், எந்த மைலில் என்பதை தெரிவிக்க முடியுமா என்று கேட்கிறேன். . . .

**SRI. V. K. KOTHANDARAMAN :** இப்போது உடனடியாக அதை சொல்லுவதிற்கில்லை. நாளைக்கு இந்த தகவலைக்கொடுக்கிறேன. . . . .

**THE HON. SRI. P. KAKKAN :** இப்போது சொல்ல முடியுமானால் நல்லது. . . . .

**SRI V. K. KOTHANDARAMAN :** மந்திரிகளிடத்தில் சில கேள்விகள் கேட்கும் போது, நாளைக்குச் சொல்கிறேன். நோட்டீஸ் வேண்டும், என்றெல்லாம் சொல்லுகிறார்கள். அதே போன்று இதையும் நான நாளைக்குச் சொல்லுகிறேன்.

[22nd April 1960

TEMPORARY CHAIRMAN (Sri A. Govindasamy): The hon. Member may please address the Chair.

SRI V. K. KOTHANDARAMAN : இம்மாதிரி நடந்துகொண்டு இருப்பது செங்கல்பட்டு டிவிஷனில் மட்டுமல்ல, மதுரை டிவிஷனிலும் நடந்திருக்கிறது . . . .

THE HON. SRI P. KAKKAN : உண்மையிலேயே இம்மாதிரியான தப்பிதங்கள் நடைபெறக்கூடாது என்பதற்காகத்தான் நானும் இந்த இலாகாவை நன்றாக கண்காணித்து நடவடிக்கை எடுத்து வருகிறேன். கனம் அங்கத்தினர் அவர்களுக்கு உண்மையிலேயே இதைப்பற்றி முன்பே தெரிந்திருந்தால், இதைப்பற்றி எனக்கு எழுதியிருந்தால் அதன் பேரில் நடவடிக்கை எடுத்திருக்கலாம். அதெல்லாமல் அங்கு நடக்கிறது. இங்கு நடக்கிறது என்று பொதுவாக சொல்லிக்கொண்டிருப்பது நல்லதல்ல என்பதுதான் என் அபிப்பிராயம்.

SRI V. K. KOTHANDARAMAN : அங்கு நடக்கிறது, இங்கு நடக்கிறது என்று சும்மா சொல்லவில்லை திட்டவட்டமாகவும், தைரியமாகவும் நான் சொல்லுகிறேன். இந்த விவரங்களை எல்லாம் நாளைக்கு தெரிவிக்கிறேன். அப்படி நான் தெரிவிப்பதாய் இருந்தால் அதன் பேரில் உடனடியாக நடவடிக்கை எடுப்பதற்கும் அமைச்சர் அவர்கள் தயாராக இருக்கவேண்டும்.

THE HON. SRI P. KAKKAN : அந்த மாதிரி தப்பிதங்கள் ஏதாவது நடந்திருக்கிறது என்று தெரிந்தால் நிச்சயமாக அதன் பேரில் நடவடிக்கை எடுக்கப்படும்.

SRI V. K. KOTHANDARAMAN : அமைச்சர் அவர்களும், அவர்களுடைய அதிகாரிகளும் நடவடிக்கை எடுப்பார்கள் என்பது எங்களுக்குத் தெரியும். சுடர் விளக்கு என்று இருந்தாலும் அதை தூண்டிவிடுவதற்கு தூண்டுகோல் ஒன்று வேண்டும். அந்த முறையில்தான் எதிர்கட்சி தூண்டுகோல்போல் இருந்து இம்மாதிரியான குறைகள் எல்லாம் நடக்கின்றன, அவைகளை எல்லாம் போக்கவேண்டும் என்பதற்காகத்தான் இதையெல்லாம் சொல்லுகிறோம்....

SRI P. G. KARUTHIRUMAN : On a point of information . . .

SRI M. P. SUBRAMANIAM : There can be no point of information now.

SRI P. G. KARUTHIRUMAN : Why ?

TEMPORARY CHAIRMAN (Sri A. Govindasamy) : The hon. Member may continue his speech.

SRI P. G. KARUTHIRUMAN : தூண்டுகோலைக்கொண்டு அதிகமாக தூண்டி விட்டு, திரியை கீழே தள்ளி விடக்கூடாது, அந்த முறையிலுள்ள தூண்டுகோலாய் இருக்கக்கூடாது.

SRI V. K. KOTHANDARAMAN : ஒரு வார்த்தையை எந்த முறையில் வேண்டுமானாலும் அர்த்தம் செய்து கொள்ளலாம். தூண்டுகோலாகவும் எடுத்துக்கொள்ளலாம் அல்லது திருடுகோலாகவும் எடுத்துக் கொள்ளலாம்.....

TEMPORARY CHAIRMAN (Sri A. Govindasamy): The hon. Member may please address the Chair.

SRI V. K. KOTHANDARAMAN : இது போன்று லோக்கல் போர்டின் கீழ் சில வேலைகள் நடந்து கொண்டிருக்கின்றன. சில ரோடுகளை லோக்கல் போர்டு அதிகாரிகள் போடுகிறார்கள். இவ்விதம் போட்ட

22nd April 1960] [Sri V. K. Kothandaraman]

பின்னல் அதை பழுது பார்ப்பதற்குரிய வகையில் அவர்களிடம் பணம் இருப்பதில்லை. ஆகவே இதையெல்லாம் ஜில்லா போர்டு ஏற்றுக்கொள்ள வேண்டும். அனேகமாக பத்து வருடத்திற்கு முன்னல் போடப்பட்ட ரோடு கள் எல்லாம் பழுது பார்க்க பணம் இல்லாமல் ஜில்லா போர்டும் ஒன்றும் செய்யாமல் இருந்து கொண்டிருக்கிறது. இதன் காரணமாக ரோடுகள் எல்லாம் மிகவும் மோசமாக இருந்துகொண்டிருக்கின்றன. இதையெல்லாம் சர்க்கார் கவனத்தில் எடுத்துக்கொண்டு பழுது பார்க்கவேண்டிய ரோடுகளை எல்லாம் பழுது பார்ப்பதற்கு உடனடியாக கவனம் செலுத்தவேண்டும் என்று சர்க்காரை கேட்டுக்கொள்கிறேன். (மணியடிக்கப்பட்டது.) இன்னும் ஒரு நிமிடத்தில் முடித்து விடுகிறேன். குறிப்பாக மட்ராஸ் சர்க்கிளை பொறுத்தவரையில் சாதாரணமாக அட்டண்டர் வேலை செய்து கொண் டிருக்கும் ஒருவரை க்ளார்க் வேலைக்கு மாற்ற வேண்டும் என்றல், அதற் குரிய எக்ஸம்ஷன் வாங்க வேண்டும் என்றல் சர்க்காருக்கு தெரிவிக்க வேண்டும் என்றிருக்கிறது. ஆனல் இவ்விதம் ஒன்றுமில்லாமல் ஏழு வருடங்கள், 12 வருடங்கள் என்று அட்டண்டர் வேலை பார்த்து வருபவரை கிளார்க் வேலை செய்யும்படியாக ஆக்கப்பட்டிருப்பதாக தெரிகிறது. இம் மாதிரி பப்ளிக் சர்வீஸ் கமிஷனுக்கு ஒன்றும் தெரிவிக்கவில்லை, ரோடு இன்ஸ்பெக்டர்கள் போன்ற வேலைகளில் போட்டுவிட்டு அதிகாரிகள், அவர் களை வேறு வேலை செய்யக்கூடிய முறையில் வைத்துக்கொள்கிறார்கள் என்று தெரிகிறது. இவைகளை எல்லாம் தவிர்க்கவேண்டும். சரியான முறையில் ரோடுகளை எல்லாம் போடவேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

*Sri K. KARUTHAPPA GOUNDER : கனம் தலைவர் அவர்களே. சபை முன்பு அமைச்சர் அவர்களால் கொண்டு வந்திருக்கும் பெரு வழித்துறை மான்யத்தை ஆதரிப்பதோடு என் தொகுதியாகிய ஒட்டன் சத்திரம் சம்பந்தப்பட்டவரை ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்தத் தொகுதியில் 120 மெயின் வில்லேஜ்சஸ் இருக்கின்றன. இவைகளில் எல்லாம் ரோடு வசதி மிக மிக குறைவு. ஒரு சிலரோடுகள் அங்கங்கே போடப்பட்டிருந்தாலும், பின்னல் அதை சரிவர பராமரிக்கப்படாததாலும், போக்குவரத்துக்கே இடைஞ்சலாகவும் சிக்கலாகவும் இருந்து கொண்டிருக்கின்றன. குறிப்பாக புளியம்பட்டியிலிருந்து கட்டாணிவெலுசுக்கு ஒரு ரோடு போடப்பட்டிருக்கிறது. அந்த ரோடு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த ரோடாக இருந்து வருகிறது. பழனிக்கு போவ தற்கு இது மிகவும் பயன்படுகிறது. இதை முன்னிட்டேதான் இந்த ரோடு போடப்பட்டிருக்கிறது. இந்த ரோடு ஆரம்பத்திலிருந்து மண் தான் போடப் பட்டு இருக்கிறது. பின்னல் அது இதுவரையிலும் மெட்டல் போடப் படவில்லை. அதோடு இது வரையிலும் பழுது பார்க்கப்படவில்லை. ஆகவே இந்த ரோடு இன்று மிகவும் சீர்கேடான நிலையில் இருந்து கொண்டிருக் கிறது. ரோட்டைத்தான் முதலில் போட்டு கொடுத்தார்களே தவிர அதை இதுவரையிலும் நல்ல முறையில் விரிவுபடுத்தி பாலங்கள் அமைத்து கொடுக்க சர்க்கார் முன் வரவில்லை. அதோடு அந்தப் பகுதியில் இருந்து தாராபுரத்திற்கு போவதற்கு வசதியாக பஸ் போக்குவரத்துக்கு வசதி செய்து தரவேண்டும் என்று சர்க்காரை அநேககடவை கேட்டும் இதற்காக மனுக்கள் மூலமாகவும் சர்க்காரை கேட்டுக்கொண்டிருக்கிறோம். அதற்கு இந்த ரோடு, பஸ் போக்குவரத்துக்கு வசதியாக இல்லை, பஸ் போக்கு வரத்திற்கு தகுதியாக விரிவுபடுத்தப்படவில்லை, இதிலுள்ள பாலங்கள் எல்லாம் சரியாக செப்பனிடப்படவில்லை என்று சொன்னர்கள், சம்பந்தப்பட்ட அதிகாரிகள். ஆனல், இதை செப்பனிட சர்க்காரிடமிருந்து எந்தவிடதமான நடவடிக்கையுமில்லை. ஆகவே இதை நல்ல முறையில் விரிவு படுத்தி அங்கே யுள்ள பாலங்களை எல்லாம் நன்றாக அமைத்து அந்த ரோட்டில் பஸ் போக்குவரத்துக்கு வசதி செய்து தரவேண்டும் என்று சர்க்காரை கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, மஞ்சநாயக்கன்பட்டியிலிருந்து கள்ளிமந்தயத்திற்கு ஒரு ரோடு போடப்பட்டிருக்கிறது. அதிலும் பஸ் போக்குவரத்துக்கு வசதி யில்லாத காரணத்தில் இன்றைக்கு அந்த ரோடு மிகவும் பாழடைந்து

[Sri K. Karuthappa Gounder] [22nd April 1960

இருக்கிறது. அந்த ரோாட்டில் ஜனங்கள்கூட நடமாடுவதற்கு முடியாத நிலைமையில் இருக்கிறது. அதையும் நல்லமுறையில் பழுது பார்த்து, மெட்டல் போட்டு, விரிவுபடுத்தி பாலங்களை எல்லாம் செப்பனிட்டு கொடுத்தால் அந்தப் பகுதிக்கு மிகவும் அனுகூலமாய் இருக்கும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

மார்க்கம்பட்டியிலிருந்து வெறியப்பூருக்கு சின்னக்காம்பட்டி வழியாக ஒரு ரோடு போடப்பட்டிருக்கிறது. இந்த ரோடு மூலமாகவும் பஸ் போக்கு வரத்து வசதி செய்து தரவேண்டுமென்று அந்தப் பகுதியிலுள்ள மக்கள் சர்க்காரை எத்தனையோ தரம் கேட்டும், இதைப்பற்றி வற்புறுத்திக்கூறியும் இந்த ரோடு வசதியில்லாத காரணத்தால் பஸ் ரூட் கொடுப்பதற்கு மறுக்கப் பட்டிருக்கிறது. சமீபத்தில் அந்தப்பகுதியில் விஜயம் செய்த கனம் மராமத்து இலாகா அமைச்சர் அவர்கள் கூட, மார்க்கம்பட்டியிலிருந்து சின்னக்காம்பட்டி வழியாக வெறியப்பூருக்கு போகும் ரோடு வழியாக போனார்கள். அப்போது அந்த ரோட்டிலுள்ள குறைகளை எல்லாம் நேரி லேயே கண்டார்கள். ரோட்டையெல்லாம் பார்வையிட்டபின், இதற்கு உடனடியாக ஆவன செய்வதாக வாக்களித்திருந்தார்கள். ஆகவே அந்த ரோட்டை உடனடியாக சரியான முறையில் பராமரிப்பதற்காக எடுத்துக் கொள்ள வேண்டும் என்று கனம் அமைச்சர் அவர்களுக்கு மீண்டுமொரு
11 a.m. முறை ஞாபகப்படுத்த விரும்புகிறேன். அடுத்தபடியாக, அரசப்ப பிள்ளைப் பட்டிலிருந்து பெரியகோட்டை வரையில் ஒரு ரோடு போடப்பட்டிருக் கிறது. அந்த ரோடு ரேட்டாகவே தெரியவில்லை. அது பெயரளவுக்குத் தான் ரோடாக இருக்கிறது. அந்த ரோட்டை நல்ல முறையில் விரிவுபடுத்தி அந்த ரோடை செம்மைப்படுத்த வேண்டும். அந்த ரோடையும் அதற்கு அருகிலுள்ள ரோட்டுகளையும் செம்மைப்படுத்தினால் அங்கே கட்டை வண்டிகள் வருவதற்கு வசதி ஏற்படும். இப்போது அங்கே கட்டைவண்டிகள் வரக்கூடிய நிலையில்கூட ரோடு சரியாக இல்லை. மேலும், தங்கச்சியம்மா பட்டியிலிருந்து குத்திலுப்பை வரை ஒரு ரோடு போடப்பட்டிருக்கிறது. அந்த ரோடு போடப்பட்டதிலிருந்து அங்கே எந்த விதமான போக்குவரத் துக்கும் வசதி இல்லை என்று கூறி இத்துடன் என் உரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

(Mr. Speaker resumed the Chair and rang the bell.)

**MR. SPEAKER :** பேச விரும்பும் கனம் அங்கத்தினர்கள் என்னிடம் முன்னதாகவே வந்து தங்கள் விருப்பத்தைத் தெரிவிக்க வேண்டும். முன்னதாகத் தெரிவித்த ஒவ்வொரு கனம் அங்கத்தினருக்குத் இவ்வளவு நேரம் என்று நேரம் ஒதுக்கிய பிறகு வேறு கனம் அங்கத் தினர்கள் பேச வேண்டுமென்று விருப்பம் தெரிவித்தால் எவ்வாறு நேரம் கொடுக்க முடியும்? அடுத்த மானியங்களின் விவாதத்தின் போதாவது கனம் அங்கத்தினர்கள் முன்னதாக வந்து என்னிடம் தெரிவித்தால், நன்றாக இருக்கும்.

***SRI P. M. MUNUSWAMI GOUNDER :** கனம் சபாநாயகர் அவர் களே, கனம் மராமத்து இலாகா அமைச்சர் பிரேரேபித்திருக்கும் மானிய கோரிக்கையை ஆதரித்தும் அவரைப் பாராட்டியும் சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். கனம் மராமத்து இலாகா அமைச்சர், எடுத்து நடத்த ஆரம்பித்ததிலிருந்தே இந்த இலாகாவை மிகவும் வெற்றிகரமாக நடத்திவருகிறார். அத்துடன் அவர் மிகவும் பிற்பட்ட பல இடங்களுக்கு தாமே நேரில் வந்து அந்த இடங்களைப் பார்த்து அங்கெல்லாம் செய்ய வேண்டிய காரியங்களைச் செய்திருக்கிறார். எனவே இந்த அமைச்சருக்கு நாம் மற்ற அமைச்சர்களை விட அதிக முக்கியத்துவம் கொடுக்காமல் இருக்க முடியாது. இப்போது பேசிய கனம் அங்கத்தினர்கள் எல்லோரும் அவரைப் பாராட்டிப் பேசியதிலிருந்தே இது தெரியும். சேலம் ஜில்லாவைப் பொறுத்தவரையில் பழைய சாலைகளும், ப்ரிட்ஜுகளும் எங்கெங்கு இருக் கின்றன என்று "மாப்" பைப் பார்த்தால், அந்த ஜில்லா மிகவும் பின்தங்கியிருப்பது நன்றாகத் தெரியும். பல வருஷங்களாக சேலம்

22nd April 1960] [Sri P. M. Munuswami Gounder]

ஜில்லா போர்டு அங்கத்தினர்கள் தர்மபுரி, சேலம், கிருஷ்ணகிரி ஆகிய தாலூகாக்களின் பின்தங்கிய நிலையை எடுத்துச்சொல்லியிருக்கிறார்கள். கனம் அமைச்சர், அவ்வாறு சொல்லப்படுவதையெல்லாம் நன்றாக கவனித்து வருகிறார்கள். அரசாங்க உத்தியோகஸ்தர்களும் அவருக்கு தங்கள் ஒத்துழைப்பைக் கொடுத்து நன்றாக வேலை செய்துவந்திருக்கிறார்கள். அந்த பகுதிகளில் மேலும் அக்கறை செலுத்தி எங்கெங்கு சாலைகள் அவசியமோ அங்கெல்லாம் நல்ல முறையில் சாலைகள் போட வேண்டு மென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன். கடந்த மாதம் கனம் மராமத்து இலாகா அமைச்சர் கிருஷ்ணகிரியில் வேப்பன பள்ளி பிர்க்காவில் சுற்றுப்பிரயாணம் செய்தபோது, " மாப் "-பிலே இல்லாத இடத்தை அங்கே கண்டார்கள். அந்தப் பகுதியில் உள்ள மக்கள், வேப்பனபள்ளி-தீர்த்தம் ரோடிலிருந்து பேரிகை வரை 12 மைல் தூரம் சாலை போட வேண்டும் என்று சர்க்காரிடம் கோருவது புதிது அல்ல. அவர்கள் பல வருஷங்களாக அவ்வாறு கோரிவருகிறார்கள். நான் இந்த சபையில் முன்பு அங்கத்தினராக இருந்தபோது கூட பலமுறை அந்த கோரிக்கையை எடுத்துச்சொல்லியும் வெற்றி காணவில்லை. சர்க்கார் முயற்சி செய்து அதை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்க வேண்டுமென்று கோரியிருந்தும், கடைசியில் அது சேர்க்கப்படாததைக் காண்கிறேன். இப்போது, அதை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்க வேண்டும் என்று கனம் அமைச்சர் சொல்கிறார். அதை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலேயே செய்ய வேண்டும் என்று நான் கோருகிறேன். கட்டாயம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலேயே, தீர்த் தத்தையும் பேரிகையையும் இணைக்கக்கூடிய 12 மைல் ரோடைப் போட வேண்டும் என்று நான் கோருகிறேன். இந்தப் பகுதி மைசூர் ராஜ்யத்திற்கு அருகாமையில் இருக்கிறது. எனவே அந்த ரோடைப் போட்டால் அதை இன்டெர் ஸ்டேட் (Inter State) ரோடாகக் கூட பாவிக்க முடியும் என்று சொல்லிக்கொள்கிறேன். அதோடு தீர்த்தத்தில் மார்கண்டேய நதிக்கு ஒரு பாலம் கட்ட வேண்டியது மிகவும் அவசியம். அந்தப் பகுதிக்கு கனம் அமைச்சர் வந்திருந்தபோது குருபரப்பல்லி-குப்புச்சிடாரை அருகில் உள்ள சின்னகொத்தூர் ஊரில் ஒரு கால்கோள் விழாவில் கலந்துகொண்டார்கள். அந்தப் பகுதி மிகப் பிற்பட்ட பகுதி. அங்கிருந்து வெளியே வருவதற்கும் வசதி இல்லாமல் இருந்தது இப்போது அங்கே பஸ் போக்குவரத்து இல்லாவிட்டாலும் அங்குள்ள மக்கள் நடந்து வருவதற்காவது வசதியான நிலைமை ஏற்பட்டிருப்பது குறித்து அவர்கள் மிகவும் சந்தோஷப்படுகிறார்கள். அவர்கள் சார்பாக நான் சர்க் காருக்கு நன்றிசெலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன். மேலும் அந்தப் பகுதியில் சில இடங்களில் குறுகிய ரோடுகள் இருக்கின்றன. குறிப்பாக' சூளகிரியிலிருந்து பேரிகைக்கும், கிருஷ்ணகிரியிலிருந்து கல்லாவிக்கும் ரோடுகள் வெகு காலத்திற்கு முன்பு ரோடுகள் போடப்பட்டன. 15, 20 வருடங்களுக்கு முன்பு அந்தப் பிரதேசங்களை பஞ்சப் பிரதேசங் களாகக் கருதி ஆட்களுக்கு வேலை கொடுக்க அந்த ரோடுகள் போடப் பட்டன. அவை 8 அடி, 10 அடி அகலமுள்ள ரோடுகள். இப்போது அந்த ரோடுகளில் பஸ்கள் போகின்றன. அந்த ரோடுகள் அவ்வளவு குறுகலாக இருப்பதால் பஸ்கள் போவது மிகவும் கஷ்டமாக இருக்கிறது. அந்த ரோடுகளை அகலப்படுத்த வேண்டும். அவை குறுகலாக இருப்பதால் அங்கே பஸ் விபத்துகள் ஏற்படுகின்றன. விபத்துகளைத் தவிர்ப்ப தற்காகவும், நல்ல போக்குவரத்து வசதிகளைச் செய்து தருவதற்காகவும் அந்த ரோடுகளை அகலப்படுத்த வேண்டுமென்று சொல்லிக்கொள்கிறேன். குறிப்பாக கிருஷ்ணகிரியிலிருந்து ராயகோட்டை போகும் வழியில் ஒரு பாலம் கட்ட வேண்டும். அங்கே கிருஷ்ணகிரி நீர் தேக்கம் அணையைக் கட்டும்போதே பாலத்தைக் காட்ட வேண்டுமென்று சொல்லப்பட்டிருந்தாலும் அப்போது அங்கே பாலம் கட்டப்படவில்லை. அங்கே பாலம் கட்ட வேண்டுமென்று சொல்லிக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள் கிறேன்.

* Sri V. K. RAMASWAMY MUDALIYAR: Mr. Speaker, in supporting the Cut Motion, I would like to make a few observations.

[Sri V.K. Ramaswamy Mudaliar] [22nd April 1960

On so many previous occasions also I have stated that there was a lot of delay in the preparation of estimates, investigation and execution of so many works. As far as possible, the department should try to avoid all these delays and see that the money that is allotted to the department is spent at any cost. Even with regard to the Government of India grants, we find that there are many lapses. In many cases, the moneys made available by the Government of India are not fully spent. I want the department concerned to look into these matters in all seriousness.

Sir, I find that a sum of about Rs. 15 lakhs has been provided for the construction of quarters for the Block Development staff. I do not know what exactly is the position. I am sure the Hon. Minister, in his reply, will tell the House whether the Government of India grant is being received on this account. If not, I wonder whether it is necessary at all to spend so much money on the construction of quarters for the Block staff from State Funds and whether they could not be housed in rented buildings and whether the amount that is spent on this head could not be more usefully spent in the formation of roads and in providing so many other amenities in that area. This aspect of the question should also be taken into consideration by the Minister concerned.

There was a proposal to integrate the services and that question has been under the contemplation of the Government for a very long time. I want to have a categorical answer from the Hon. Minister when that question would be taken up and whether the Government would be prepared to take it up immediately if it had not been taken up already. We would very much like to know the stage at which the matter stands.

So far as the special works are concerned, I do not deny the fact that there will be special, separate staff. I want the Minister to consider the question of integration of services very seriously. During the last budget discussion, we were told that something would be done. I do not know whether anything has been done at all. I would request the Hon. Minister to tell the House, when this question would be solved.

With regard to the maintenance of roads, I wish to state that in many places, they are not maintained properly and the district boards with the Collectors as Special Officers at present have suggested the taking over of many roads. But, the Government have been telling us that the matter was being examined. I find that they have not raised their little finger in regard to this matter. They have not taken over the roads as suggested by the Special Officers. In all seriousness, I stress that the Government must immediately take up these roads and see that they are maintained properly. Highways, I am very glad to note that they are maintained very well. But still, in some places, they require recoating and in some others bridges have to be re-built and broadened and built strongly. Some very heavy earth-moving machines are being taken by road to the Neiveli Project from here. So, the Government should take up in all earnestness the question of strengthening, broadening and re-building the many bridges in the road leading to the Neiveli Project area, as early as possible.

22nd April 1960] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

With regard to Express Highways, I am sure we will be getting the Government of India grant. We have decided to take a certain route to Bangalore immediately. I would like the Hon. Minister to tell us when exactly the work would commence and whether our Government are at all receiving any aid from the Government of India from some of their Funds and when the work is likely to be put into execution.

With regard to circuit houses and travellers' bungalows, in many places they are badly kept. The idea of the Government of India and the State Government is to attract more tourists to our country. When such is the case, they must upgrade the circuit houses and travellers' bungalows and provide more amenities. It will facilitate more and more tourists to visit our State and they might find the place more attractive than other places.

Lastly, the general complaint is that there is too much of interference in administration. There have been wholesale transfers in February and March of this year. This is wrong. I am told in certain cases, authorities above, especially at the ministerial level, have, on account of some complaint from somebody made in a partisan spirit or on account of some alleged fault on the part of the officers, ordered the transfers without even calling for the explanation of the officers concerned. This is wrong. If officers are transferred in February and March, what can the in-coming officers do within the short time available to them ? The Hon. Minister, in all earnestness, must put an end to this and see that explanations are called for and the matter looked into carefully before transfers are ordered especially during February and March. Of course, I would not say, so far as administration is concerned, the Government should not interfere and set right matters. But making transfers without going into details is bad and I hope the Hon. Minister will look into the matter. That is all my submission, Sir.

THE HON. SRI P. KAKKAN : கனம் சபாநாயகர் அவர்களே, மதிப்பிற்குரிய அங்கத்தினர்கள் பலர், கிராம ரோடுகளைப்பற்றி அதிகமாக எடுத்துச் சொன்னார்கள். கனம் ஸ்தல ஸ்தாபன மந்திரி அவர்களுடைய பதிலிலும் அதைப்பற்றி அதிகமாக நன்றாகத் தெரிவிப்பார்கள் என்று நான் நினைக்கிறேன். கிராம அபிவிருத்தி திட்டத்தின் மூலமாகவும், சமுதாய நலத் திட்டத்தின் மூலமாகவும், தேசிய விஸ்தரிப்புத் திட்டத்தின் மூலமாகவும் கிராம ரோடுகள் நன்றாக அபிவிருத்தி செய்யப்படுகின்றன. ஓரளவு சீர்ப்படுத்தப்படாமல் இருக்கும் ரோடுகளையும் நல்ல முறையிலே வைத்துக்கொள்ளுவதற்குத் தக்க ஏற்பாடு செய்யவேண்டும் என்பதில் அதிக அக்கறை எடுத்துப் பரிசீலனை செய்யப்படுகிறது. மதிப்பிற்குரிய முதல் அமைச்சர் அவர்களே, இந்த மாகாணத்தில் இப்படி மிகவும் சீர்கேடு அடைந்திருக்கும் ரோடுகள் எத்தனை, எவ்வளவு மைல்கள் இருக்கின்றன, அவைகளைச் செப்பனிட எவ்வளவு செலவாகும் என்ற விவரங்களையெல்லாம் அறியும்படி சொன்ன பிற்பாடு, மாகாணத்தின் பெருவழித்துறை இன்ஜினீர் அவர்களை அழைத்து, அதற்குப் புள்ளிவிவரங்களைத் தயார் செய்து, கிராமங்களிலே இருக்கும் ரோடுகளையெல்லாம் நல்ல முறையிலே நாம் செப்பனிட்டு அவர்களுக்கு உதவி செய்யவேண்டுமென்று ஏற்பாடு செய்துகொண்டிருக்கிறோம். ஏனென்றால், கிராம விவசாய மக்கள் தான் இந்த நாட்டின் முன்னேற்றத்திற்கு முதுகெலும்பு போன்றவர்கள், அவர்களுக்கு உதவி செய்யவேண்டுமென்ற நோக்கத்தோடு, முதல் அமைச்சர் அவர்கள் என்னை இந்த ஏற்பாட்டைச் செய்யச் சொன்னார்கள். அதற்கு இணங்கித்தான் நாங்கள் இந்த ஏற்பாட்டைச் செய்வதற்கு நன்கு கவனித்து, இங்கிருக்கும் ஸ்தல ஸ்தாபன

[Sri P. Kakkan] [22nd April 1960

மந்திரி அவர்களும் ஸ்தல ஸ்தாபன இலாகா காரியதரிசி அவர்களும், நானும், பொது மராமத்து இலாகா காரியதரிசி அவர்களும், பிரதம இனஜினீர் அவர்களும் ஒன்ருகக் கூடி, இதற்கு எவ்வாறு நாம் ஒத்தாசை, உதவி செய்யவேண்டுமென்று பரிசீலனை செய்து, உடனடியாக அவை எல்லாவற்றையும் செய்ய முடியாவிட்டாலுங்கூட, எவ்வளவு தூரம் செய்ய முடியுமோ அவ்வளவு தூரம் செய்வதற்கு இப்பொழுது திட்டமிட்டிருக்கிறேம். இந்த வருஷத்திலே சுமார் பத்து லட்சம் ரூபாய்களை ஒதுக்கி, முதன் முதலில் எதற்குச் செலவிடவேண்டுமோ அதற்கு முக்கியமாகச் செலவிட்டு, ரோடுகளை நல்ல முறையிலே வைப்பதற்குத் திட்டமிட்டு ஏற்பாடு செய்திருக்கிறேம்.

ஜில்லா போர்டு ரோடுகளில் சில மிகவும் மோசமாக இருக்கின்றன என்பதும் நமக்குத் தெரியும். ஜில்லா போர்டுகளின் நிதி நிலைமையையும் அரசாங்கமே கவனித்து, அவர்களுக்கும் பணம் கொடுத்து இந்த வகையிலே உதவி செய்கிறேம். மிகவும் மோசமான நிலையில் இருக்கும் ரோடுகளுக்கு ப்ரையாரிடி கொடுத்து, அதற்கும் செலவு செய்யவேண்டுமென்று கமிட்டியிலே பரிசீலனை செய்து, அதற்காகவும் பதினைந்து லட்ச ரூபாய்க்குமேல் செலவு செய்து, அதையும் அதிக அக்கறையோடு கவனிக்க வேண்டுமென்று திட்டமிட்டு ஏற்பாடு செய்திருக்கிறேம்.

அதைத் தவிர, இந்த மாகாணத்திலே இவ்வாறு உள்ள ரோடுகளை கணக்கெடுத்து, எவ்வளவு செலவாகும், எவ்வாறு செய்யவேண்டும் என்று திட்டமிட்டு, நல்ல முறையிலே, குறிப்பாக கிராம விவசாய மக்களுக்கு, உணவு உற்பத்தி செய்யக்கூடிய அத்தகைய மக்களுக்கு ரோடுகள் வசதி ஏற்படுத்திக் கொடுக்கவேண்டுமென்ற நோக்கத்தோடு இதைச் செய்து வருகிறேம். இந்த அரசாங்கமானது கிராமத்திலே இருக்கும் ரோடுகளைப் பொறுத்த வரையில் கண்ணுங்கருத்துமாக இருந்து பாடுபட்டு வருகிறது என்பதை கனம் அங்கத்தினர்களுக்குச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்திலே, எங்கு நான்கு மைல் தூரம் இருக்கிறதோ அப்பேர்ப்பட்ட ரோடுகளை மெட்டல் செய்யவேண்டும், ஒரு மைல் இரண்டு மைல் இருந்தாலும் ரோட்டு உதவி செய்யவேண்டும், அதுவும் விவசாயம் அதிகமாக நடைபெறும் இடங்களிலே, நஞ்சை நிலம் அதிகமாக இருக்கும் இடங்களிலே, விவசாயிகள் தாங்கள் உற்பத்தி செய்யும் தானியங்களை அந்தக் கிராமங்களிலிருந்து வெளியே கொண்டு வர உதவி செய்யவேண்டுமென்ற நோக்கத்தோடு திட்டமிட்டு மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திலே ரோடு வசதிகள் செய்ய நாம் முன்வந்திருக்கிறேம்.

அதைத் தவிர, அடுத்தபடியாக இருக்கும் பிராந்தியங்களிலே, ஜாஸ்தி காடாரம்பப் பிரதேசமாக இல்லாவிட்டாலுங்கூட, அதைக் காட்டிலும் நஞ்சை நிலங்களை ஒட்டியிருக்கும் அந்தப் பகுதி விவசாயம் அதிகமாகச் செய்யும் புஞ்சை நிலமாக இருந்தால், எட்டு மைல் வந்துவிட்டால் மெட்டல் பண்ணவேண்டும் என்று திட்டமிட்டிருக்கிறேம். புஞ்சை நிலங்கள் அல்லது இவ்வாறு காடாரம்பமாக இருக்கும் இடங்களில் 12 மைல் வந்துவிட்டால் மெட்டல் பண்ணவேண்டும், சிறிய பகுதிக்கெல்லாம் ரோடு எடுக்கவேண்டுமென்று திட்டமிட்டு நல்ல முறையிலே செய்கிறேம். இடத்தின் தன்மைக்கு ஏற்ப நாம் திட்டம் போட்டு காரியம் செய்கிறேம். திட்டம் இல்லாமல் எந்தக் காரியத்தையும் செய்ய முடியாது. திட்டம் போட்டுக் காரியம் செய்யும்போது, எல்லாக் காரியங்களையும் ஏக காலத்திலே எடுத்துக்கொள்ள முடியாது. ஆகையால், 'ஒன்றே செய்க, நன்றே செய்க', என்றபடி நல்ல முறையில் கிராம மக்களுக்குப் போக்குவரத்து வசதியைச் செய்து கொடுத்து, அவர்கள் தாங்கள் உற்பத்தி செய்கின்ற உணவுத்தானியங்களுக்கு நல்ல விலை பெறும் அளவுக்கும், தங்களுக்கு வேண்டிய சாமான்களைத் தங்குதடையின்றி வாங்கிக் கொண்டு வருவதற்கும் போக்குவரத்து நன்ருக இருக்கவேண்டும் என்பதை உணர்ந்திருக்கிறேம் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

22nd April 1960] [Sri P. Kakkan]

கனம் அங்கத்தினர் திரு ஸ்ரீனிவாச அய்யர் அவர்கள் பேசும்போது, அஸ்ஸாம் ராஜ்யத்தில் ரோடுகளுக்காக ஜாஸ்தி ரூபாய் செலவழித்திருக்கிறார்கள் என்று தெரிவித்தார்கள். இந்தியா தேசத்திலேயே பெரும் பான்மையான ரோடுகள் அமைத்துள்ள மாகாணம் நம்முடைய மாகாணம் தான் என்பதைப் பல பெரியவர்கள் நன்றாக வாயார வாழ்த்தியிருக்கிறார்கள் என்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன். அஸ்ஸாம் ராஜ்யத்தில் தார் ரோடு போட்டிருக்கலாம். மலைப் பிரதேசங்களில் தார் ரோடு போடுவது உண்டு. தார் ரோடு போடாவிட்டால் மழைக் காலங்களில் கெட்டு விடும். நம் மாகாணத்திலுங்கூட, மலைப் பிரதேசங்களில் நாம் மெட்டல் பண்ணவுடனேயே தார் ரோடு போடவேண்டுமென்று சொல்லியிருக்கிறோம். மலையாளத்திலிருந்து நம் ராஜ்யத்தோடு இணைக்கும் மலைப் பிராந்திய ரோடுகளை அம்மாதிரி நல்ல முறையில் வைப்பதற்காகத்தான் ஏற்பாடு செய்கிறோம். ஆகையால், இந்த மாகாணமானது ரோடுகள் வைத்துக்கொள்வதிலே நல்ல பெயரை எடுத்திருக்கிறது. இந்தியா தேசத்திலேயே இந்த மாகாணம்தான் அந்த நல்ல பெயரை முதல் தரமாக எடுக்கிறது என்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன். நானும் முதலிலேயே என்னுடைய உரையில் அதைப்பற்றித் தெரிவித்திருக்கிறேன். கனம் அங்கத்தினர் அவர்கள் அதை நன்றாகப் பார்க்குமாறும் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

இந்த மாகாணத்தைப் பொறுத்த வரையிலும் 100 சதுர மைல்களுக்கு 49 சதுர மைல்களுக்கு ரோடு போடப்பட்டிருக்கிறது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் முடிவில், 100 சதுர மைலுக்கு 54 சதுர மைல் வரைக்கும் ரோடுகள் போடுவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. நாம் இந்தியா முழுமையும் எடுத்துப்பார்த்தாலுங்கூட, 100 சதுர மைலுக்கு 26 சதுர மைல் அளவுக்குத்தான் ரோடு போடப்பட்டிருக்கிறது. நம் மாகாணத்தில் நாம் அதிகமாக போட்டிருக்கிறோம் என்பதை நான் பணிவோடு தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

ரோடு அமைப்பதிலே நம்முடைய மாகாணத்திலே அதிக அக்கறை எடுத்துக்கொள்ளுகிறோம். குறைவாக பணத்தை ஒதுக்கி அதிகமாகச் செய்ய வேண்டும் என்ற காரணத்தினாலே, இங்கேயிருக்கும் மின்சார இலாகா மந்திரி அவர்களும் நானும் மூன்று மாதங்களுக்கு ஒரு தடவை அதிகாரிகளைக் கூட்டிவைத்து, ஒதுக்கப்பட்டிருக்கின்ற பணம் செலவிடப்பட வேண்டும் என்பதை வற்புறுத்துகிறோம். அது விஷயத்தில் உடனடியாக தக்க நடவடிக்கை எடுத்து நல்ல முறையிலே பணத்தைச் செலவு செய்து ரோடுகளை நன்றாக அமைக்கவேண்டுமென்று ஏற்பாடு செய்து வருகிறோம். அதோடு மட்டுமல்ல, நான் எங்கு ஊர் போனாலும் அப்பொழுது அந்த இடங்களிலுள்ள டிவிஷனல் என்ஜினியர், எக்ஸிகியூடிவ் என்ஜினியர் ஆகிய உத்தியோகஸ்தர்களை ஒதுக்கப்பட்ட பணம் எவ்வளவு, இதுவரையிலும் எவ்வளவு செலவு செய்திருக்கிறார்கள் என்பதற்கான ஸ்டேட்மெண்டை என்னிடம் கொடுக்கவேண்டுமென்று ஏற்பாடு செய்திருக்கிறேன். ஆகவே, ஒதுக்கிய பணம் எல்லாம் அவர்கள் தக்கபடி செலவு செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்திருக்கிறோம். முன்புகூட இந்த மன்றத்தில் அம்மாதிரி வாக்குறுதி கொடுத்திருக்கிறேன். இரண்டாவது ஐந்தாண்டு திட்டகாலத்தில் ரோடுகளுக்காக ஒதுக்கப்பட்ட பணத்தை செலவழிப்போம் என்று வாக்குறுதி கொடுத்தேன். நிச்சயமாக செலவழிப்போம் என்று இப்பொழுது தெரிவித்துக்கொள்ளுகிறேன். கனம் கோவிந்தசுவாமி அவர்கள் பேசியபொழுது பணம் குறைவாக செலவழிக்கப்பட்டிருக்கிறது என்று சொன்னார்கள். இப்பொழுது இங்கே கொடுக்கப்பட்ட தொகை டிசம்பர் மாதம் வரையில் செலவு செய்த தொகைதான். இன்னும் மார்ச் மாதம் வரையிலும் செலவிடப்பட்ட தொகையை ஒப்பிட்டுப்பார்த்தால் நிச்சயமாக ஒதுக்கப்பட்ட பணம் செலவழிக்கப்பட்டிருக்கும் என்று நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன். கார் ரோடு, சிமெண்டு ரோடுகளைப்பற்றி சொன்னார்கள். எல்லா இடங்களிலும் சிமெண்டு ரோடு போட முடியாது. ஒரு சில இடங்களில் படிப்படியாகத்

தான் சிமெண்டு ரோடுகள் போட்டுக்கொண்டு வருகிறோம். தார் ரோடு இருக்கும் இடங்களிலெல்லாம் மறுபடியும் நிதிக்குத் தக்கபடி எந்த இடத்தில் சிமெண்டு போட வேண்டுவது அவசியமோ அந்த இடத்திலே கவனம் செலுத்தி சிமெண்டு ரோடு போடுவதற்கு ஏற்பாடு செய்யப்படும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். பாண்டிச்சேரி பகுதியை அவர்கள் ஒப்பிட்டுச் சொன்னார்கள். எப்பொழுதும் வடக்குப் பகுதியை ஒப்பிட்டுச் சொல்லுவார்கள். இப்பொழுது பாண்டிச்சேரியை ஒப்பிட்டுச் சொல்லுவதற்கு வந்திருக்கிறார்கள். அங்கு நல்ல முறையில் ரோடுகள் போடப்பட்டிருக்கின்றன. நமது ரோடுகள் அதே மாதிரி நிலையில் வைக்கப்படவில்லையே என்று சொன்னார்கள். இரண்டு பிராந்தியங்களும் கூடுகிற இடங்களில் அந்த ரோடுகள் நன்றாக இருக்கும்பொழுது இந்த ரோடுகளையும் கவனித்து அவைகளை நல்ல முறையில் வைப்பதற்கு தக்க ஏற்பாடுகள் செய்யாமல் இருக்க முடியாது. எப்பொழுது மெடல் போட வேண்டும், எப்பொழுது பிளாக் டாப் போட வேண்டும் என்பதுபற்றியெல்லாம் கவனம் செலுத்திக்கொண்டு, அதற்கு தக்க ஏற்பாடுகள் செய்து வருகிறார்கள் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். கனம் எதிர் கட்சித் தலைவர் வி. கே. ராமசுவாமி முதலியார் அவர்கள் பேசும்பொழுது இன்டெக்ரேஷன் ஆப் சர்வீஸ் பற்றி சொன்னார்கள். ஏற்கனவே இதை அரசாங்கம் பரிசீலனை செய்து இப்பொழுது நாம் தனித்தனியாக இர்ரிகேஷன் டிபார்ட்மெண்டு, ஹைவேஸ் டிபார்ட்மெண்டு என்று வைத்திருக்கும்பொழுதே துரிதமாக வேலைகள் நடைபெறவில்லை என்று சொல்லுவதை கனம் அங்கத்தினர்கள் அறிவார்கள். இரண்டு இலாகாக்களையும் ஒன்றாக இணைத்துவிட்டால், இன்னும் வேலைகள் தாமதப்படலாம் என்ற காரணத்திற்காக, அது இப்பொழுது தேவையில்லை என்று நினைத்துத்தான், அதுபற்றி இன்னும் ஒரு முடிவுக்கு வரவில்லை. இந்த மாகாணத்தில் வேலைகள் துரிதமாகவும் நன்றாகவும் நடைபெறவேண்டும். ஒரு சில அதிகாரிகளுக்கு ஓரளவுக்கு பணம் அதிகமாகக் கொடுத்துவிட்டாலும் வேலை நன்றாகவும், துரிதமாகவும் நடைபெறவேண்டும். ஆகவேதான் இது விஷயமாக இன்னும் ஒரு முடிவுக்கு வரவில்லை என்பதை எதிர்க் கட்சித் தலைவர் அவர்களுக்கு தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

ரோடுகள் மிகவும் நல்ல முறையிலே பராமரிக்கப்பட்டு வருகின்றன. 'பிளாக் டாப்' செய்யும் பொழுது சம்பந்தப்பட்ட ஜூனியர் என்ஜினியர்கள், உதவி என்ஜினியர்கள், ஸ்தலத்தில் இல்லாவிட்டால் அதை நான் நேராகவே கண்டித்திருக்கிறேன். ரோடுகள் பராமரிக்கப்படும்பொழுது நேராக அதிகாரிகள் மேற்பார்வையிடவேண்டும் என்று நான் சொல்லியிருக்கிறேன். அப்படி நேராக ஸ்தலத்தில் இருந்து மேற்பார்வையிடாத அதிகாரிகளுக்கு தண்டனையும் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஒரு சிலர் வேலையை விட்டுக்கூட வீட்டிற்கு போகவேண்டி நேர்ந்தது. இம்மாதிரி ரோடுகளுக்கு தார் போடும்பொழுது அதிகாரிகள் அதை நேராக கவனிக்காவிட்டால் சில கண்டிராக்டர்கள் மண்ணைக் கலந்து போட்டுவிடுகிறார்கள். ஆகவே, பராமரிப்பு வேலைகள் நல்ல முறையில் நடப்பதற்கு தக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கிறது என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

"டிராவலர்ஸ் பங்களாக்கள்", வருகிற பிரயாணிகள் தங்குவதற்கு நல்ல முறையிலே வைக்கப்படவேண்டுமென்று சொன்னார்கள். நம் மாகாணத்தில் இப்பொழுது மட்டுமல்ல, வெகு நாட்களுக்கு முன்பே முசாபரி பங்களாக்களாக இருந்தாலும் சரி, மத்திய சர்க்காரில் எடுத்து பராமரிப்புக்கும் உதவி செய்யப்படுகின்ற விடுதிகளாக இருந்தாலும் சரி, அவைகளை நல்ல முறையில் மிகவும் சுத்தமாக யாரும் குறை சொல்லாத முறையிலே வைத்துக்கொள்ள வேண்டுமென்று டிவிஷனல் என்ஜினீயர்களிடம் தக்க ஏற்பாடுகள் செய்திருக்கிறேன். ஒரு சில இடங்களில் அந்த மாதிரி குற்றங்குறை இருந்தால் மதிப்பிற்குரிய அங்கத்தினர்கள் பார்க்கும் காலத்தில் அதை எங்கள் கவனத்திற்கு கொண்டு வரும்படி உங்கள் மூலமாக தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

22nd April 1960] [Sri P. Kakkan]

கனம் எதிர்கட்சித் தலைவர் அவர்கள் உடனுக்குடன் அதிகாரிகளை மாற்றிவிடுகிறார்கள், அதுவும் வருஷம் முடிவதற்குள் மாற்றிவிடுகிறார்கள் என்று சொன்னார்கள். ஒரு சிலரை அம்மாதிரி மாற்றவேண்டிய அவசியம் ஏற்படுகிறது என்பதை அவர்களுக்கு தெரிவித்துக்கொள்ளுகிறேன். லஞ்சம் வாங்கிக்கொண்டு, சுட்ட செங்கல்லுக்குப் பதிலாக பச்சை செங்கல்லை வைத்துக்கொண்டு அரசாங்கத்திற்கு கெட்ட பெயர் வாங்கிக் கொடுக்கிறவர்களை அந்த இடத்திலேயே வைத்துக்கொண்டு நாம் பார்த்துக்கொண்டே இருக்க முடியாது. அரசாங்கம் பிறப்பிக்கும் கட்டளைகளை, மேலதிகாரிகள் பிறப்பிக்கும் கட்டளைகளை மீறி, அவர்கள் எந்த நோக்கத்தோடு வேலைகள் கண்ணும் கருத்துமாக துரிதமாக நல்ல முறையில் செய்யப்பட வேண்டுமென்று கருதுகிறார்களோ அதற்கு மாறாக நடந்து கொண்டால், அந்தக் கட்டளைகளை கவனியாமல் அவைகளை மீறி தங்கள் இஷ்டப்படி தங்கள் வேலையை செய்து கொண்டு சில ஊதியம் பெறுவதற்கு யத்தனித்துக்கொண்டிருந்தால், அப்போேர்ப்பட்டவர்களை வைத்து நிச்சயமாக இந்த அரசாங்கம் வேலை செய்ய முடியாது, அதனால் இந்த அரசாங்கத்திற்கு கெட்ட பெயர்தான் வரும். வேண்டுமென்றே ஒரு சிலரை கஷ்டப்படுத்தவேண்டுமென்று நினைக்கிற ஊழியன் நான் அல்ல. எல்லோரும் நன்றாக இருக்கவேண்டும், யாருக்கும் குற்றம் குறை இல்லாமல் வீணாக அவர்கள் மாற்றப்படக்கூடாது. அல்லது தண்டிக்கப்படக் கூடாது என்று நினைப்பவன் நான். நாம் இப்படி செய்தால் இவர் என்ன பண்ணிவிடுவார், மந்திரி என்ன செய்து விடுவார், மேலதிகாரிகள் என்ன செய்து விடுவார்கள் என்று நினைத்து வேலைகளை சரிவர செய்யாவிட்டால், அப்போேர்ப்பட்டவர்கள் வெளியில் வேறு வேலை பார்க்க வேண்டியதுதான். அவர்கள் வேறு அரசியல் கட்சியில் கூட வேலை பார்க்கலாம். ஆகவே, குற்றம் செய்தால், அவர்கள் பேரில் நிச்சயமாக அரசாங்கம் தக்க நடவடிக்கை எடுக்கும் என்று கனம் அங்கத்தினர் அவர்களுக்கு நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

கனம் சபாநாயகர் அவர்களே, இன்னும் எனக்கு 5, 10 நிமிஷங்கள் கூடுதலாகா அவகாசம் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஸ்ரீமதி பொன்னம்மாள் அவர்கள் அவர்களுடைய தொகுதியில் இருக்கிற குறைகளைப்பற்றி சொன்னார்கள். அவர்கள் சொன்ன அந்தப் பாலத்தை மூன்றாவது ஐந்தாண்டுத்திட்டத்தில் கட்டுவதற்கு பரிசீலனை செய்வதற்காக ஏற்பாடு செய்திருப்பதாக டிபார்ட்மெண்டிலிருந்து அறிகிறேன். எல்லா இடங்களிலும், எங்கு சென்றாலும், அதுவும் நான் போகும் இடங்களிலெல்லாம் பாலங்கள் கட்டவேண்டும், ரோடுகள் போடவேண்டும் என்று சொல்லுகிறார்கள். அவர்கள் சொல்லுவதையெல்லாம் கேட்டு, அவ்வளவு பாலங்களையும், ரோடுகளையும் போடுவதாக இருந்தால், இந்த பட்ஜெட்டில் நாம் 80 கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறோம், அவ்வளவும் பற்றாது இருந்தாலும் கூட, எவ்வளவு தூரம் நிதிக்கு தகுந்தபடி செய்ய முடியுமோ அவ்வளவு தூரம் செய்வதற்கு ஏற்பாடுகள் செய்துகொண்டு வருகிறோம் என்பதை கனம் அங்கத்தினர் அவர்களுக்கு தெரிவித்துக் கொள்ளு கிறேன்.

ஸ்ரீமான் அர்த்தநாரீசுவர கவுண்டர் அவர்கள் மேட்டூர் சேனல் திட்டத்தைப்பற்றி சொன்னார்கள். அவர்களுக்கு நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன், லோயர் பவானிப் பகுதியில் எங்கெல்லாம் ஊற்றுத் தண்ணீர் வந்து ரோடுகள் பாதிக்கப்பட்டிருக்கின்றனவோ அங்கு மட்டுமல்ல, மேட்டூர் பகுதியில் உள்ள அம்மாதிரி இடங்களிலும் ரோடுகளை பராமரிப்பதற்காக 3 லட்ச ரூபாய் ஒதுக்கி அர்.டி.எல்.எ. டிபார்ட்மெண்டு தக்க ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இதுமாதிரி லோயர் பவானிப் பகுதியில் பல ஆண்டுகளாக இந்தக் கோரிக்கை இருந்து, நானும் கனம் நிதி அமைச்சர் அவர்களும் அந்த வட்டாரத்தில் சுற்றுப்பிரயாணம் செய்யும் பொழுது ஊற்றுத் தண்ணீரினால், தண்ணீர் நிறைந்து ரோடுகள் பாதிக்கப்பட்டிருப்பதைப் பார்த்து, நல்லமுறையிலே அம்மாதிரி இடங்களிலே பாலம் கட்டி ரோடுகளை பராமரிப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்று கருதி, அதற்காக ஒரு திட்டம் போட்டு, ஒரு தனி டிவிஷன் ஏற்பாடு

[Sri P. Kakkan] [22nd April 1960

செய்திருக்கிறோம். அம்மாதிரி வேலைகளை கவனிப்பதற்கு சமீப காலத்தில் ஒரு டிவிஷனல் என்ஜினியரை ஏற்பாடு செய்திருக்கிறோம். அங்கு எந்த விதமான குறையும் இல்லாமல், அதற்காக பல லட்ச ரூபாய் நல்ல முறையில் செலவு செய்வதற்கு திட்டமிட்டிருக்கிறோம் என்பதை நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன். கனம் நல்லசிவம் அவர்களுக்கும் அந்த நல்ல செய்தியைத் தெரிவிக்கிறேன். சில இடங்களிலே பாசியும் பிடித்து, வண்டிகள் போகும்போது சிரமும் ஏற்படுகிறது என்று சொன்னார்கள்.
11-30 a.m. இந்த திட்டத்தின் கீழ், அம்மாதிரி இடங்களுக்கு பைப்புகள் வைக்கப் படும்; பைப்புகள் போடுவது மட்டுமல்ல, எங்கெல்லாம் கல்வர்ட்கள் கட்ட வேண்டுமோ அதுவும் பார்த்துச் செய்யப்படும். இருக்கலாம், ஒரு சில இடங்களிலே குறைகள் உள்ளதாக. அது நிதிக்குத் தக்கவாறு செய்ய வேண்டியிருப்பதால், கூடியமட்டும் நன்றாகவேதான் செய்கிறேன் என்பதை மட்டும் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

காவேரியின் குறுக்கே, பவானி பக்கத்தில் பாலம் கட்ட வேண்டும் என்று கனம் அர்த்தநாரீசுவர கௌண்டர் சொன்னார்கள். அதற்கு, மூன்றாவது திட்டத்தில், அந்தப் பாலத்தை அமைக்க ஏற்பாடு செய்கிறோம் என்று சொல்ல விரும்புகிறேன். இந்த மாகாணத்தைச் சேர்ந்தவரே, டாக்டர் சுப்பராயன் அவர்களே, மந்திரியாக இருப்பதால், அவர்கள் அந்த தொகுதியைச் சேர்ந்தவராதலால், அந்த வேலை நடக்கும் என்றார்கள். உண்மையிலேயே அவர்கள் நம் மாகாணத்திற்கு மட்டுமன்றி, இந்தியா பூராவுக்குமே ஒரு தலைவர், மந்திரி. அவர் தொகுதிக்கு மட்டுமின்றி, இந்தியாவிலுள்ள எல்லா தொகுதிக்கும் அவர் பொது வானவர். ஆகவே, அவர் சேலம் ஜில்லாவிற்கு, தென்னாற்காடு ஜில்லா விற்கு அல்லது வட ஆற்காடு ஜில்லாவிற்கு என்று மட்டுமல்ல. சமீபத்திலே, தஞ்சாவூர் பகுதியிலே, கனம் சுப்பையாப் பகுதியிலே, ஒரு பாலம் கட்டவேண்டும் என்று சொன்னார்கள். அதற்கு ஒத்தாசை, உதவி செய்ய வேண்டும் என்று சொன்னார்கள். ஆகவே, மத்திய மந்திரி எல்லாத் தொகுதிக்கும் பொதுவானவர். அவர்கள், அந்த ஜில்லாவைச் சேர்ந்தவர், அந்தத் தொகுதியைச் சேர்ந்தவர் என்றல்ல, மத்திய சர்க்கார் மந்திரி என்ற முறையிலே உதவி செய்வார்கள் என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

கனம் கோதண்டராமன் அவர்கள் சொல்லும்போது, அவர்கள் பகுதியில் ரோடுகள் பராமரிக்கப்படவில்லை என்றார்கள். ரோடுகளெல்லாம், கிராமப் பகுதிகளிலும் நல்ல முறையிலேதான் பராமரிக்கப்படுகிறது; அதற்கு வேண்டிய திட்டமிட்டு ஒவ்வொன்றாகச் செய்து வருகிறோம். இந்த மாகாணத்தைப் பொருத்த வரைக்கும், பார்க்கும் போது, எத்தனை பஸ்கள் வந்திருக்கின்றன, என்பதெல்லாம் பிரயாணிகளுக்குத் தெரியும், அங்கத்தினர்களுக்கும் தெரியும். இவ்வளவு செமண்டு ரோடுகளையும், தார் ரோடுகளையும் பார்த்தும், ஒன்றுமே நன்றாகயில்லையென்றால், அது எப்படியென்றால், அவர்கள் சொன்னதேபோல்தான் சொல்ல வேண்டும், முழுப் பூசனிக்காயை சோத்தில் மறைக்கிறார்கள் என்று. (ஸ்ரீ கோதண்டராமன்: நான் அதைச் சொல்லவில்லை). ஆகவே, இந்த மாகாணத்தில் ஏற்பட்டிருக்கும் அபிவிருத்திகள் கண்கூடாகப் பார்த்தாலே தெரியும், எவ்வாறெல்லாம் வேலைகள் நடந்திருக்கின்றன என்று. தார் திருடு போய் இருக்கிறது என்று சொன்னார்கள். ட்ரம் போய் இருக்கிறது. ஆனால், ட்ரம்மும் போகக்கூடாது என்பதுதான் என் கவலையெல்லாம். அது சம்பந்தமாக தக்க விசாரணை செய்யப்படும். வெளிப்புறத்தில் தார் சீர் கெட்டு இருந்தது. உடனடியாக நடவடிக்கை எடுக்கப்பட்டது. அது என் சொத்துப்போல்; தெய்வ சொத்துப்போல் பார்க்கிறேன் பொது சொத்தை. அப்படிப் பார்க்கிறோம் இந்த அரசாங்கம் மந்திரி; ஆகையினால் எனக்கு இம்மாதிரி சம்பவங்கள் வேறல்ல. என் வீட்டு சொத்துபோல்தான். ஆகவே இதையெல்லாம் இந்த அரசாங்கம் விடாது என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். வேலைகள் நல்ல முறையிலே நடக்க மேலே இருக்கிற செக்ரடரி

22nd April 1960] [Sri P. Kakkan]

யவர்கள், அக்கரை எடுத்து, அடிக்கடி சம்பந்தப்பட்ட பெருவழித்துறை சீப் எஞ்ஜினியர் அவர்களுக்கு துரிதமாக சீராக வேலை செய்ய வேண்டு மென்று, சொல்லி வருகிறார்கள். ஆகவே எங்கும் வேலைத்தாமதம் இல்லை என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

Sri A. GOVINDASAMY : இப்பொழுது அமைச்சரவர்கள்...

Mr. SPEAKER : குறுக்கே கேள்விகள் கேட்க முடியாது. நேரம் இல்லை. ஒரு அங்கத்தினருக்கு சான்ஸ் கொடுத்தால், மற்ற ஒவ்வொரு அங்கத் தினருக்கும் சான்ஸ் கொடுக்க வேண்டும். இப்பொழுது நாம் இந்த டிமாண்டுகளை முடித்து, அடுத்த டிமாண்டை எடுத்துக் கொள்ளவேண்டும். அதிக நேரம் இல்லை. மந்திரியவர்கள் முடித்துவிட்டால், டிமாண்டுகளை வோட்டுக்குப் போடுகிறேன்.

Sri R. SRINIVASA IYER : Sir, on a point of explanation. நான் ஹைவேஸ் நல்ல முறையிலே வேலை செய்யவில்லை என்று சொல்லவில்லை. முதல் சென்டன்சிலேயே பாராட்டித்தான் பேசியிருக்கிறேன். கிராமாந் தரங்களில், ரோடுகள் ஜாஸ்தியாகச் செய்யவேண்டும் என்றுதான் சொன் னேன். முதல் சென்டன்சிலே பாராட்டிப் பேசியிருப்பதைப் பார்க்க வேண்டும். இரண்டாவதாக, ஈஸ்ட் கோஸ்ட் ரோடைப்பற்றி—இந்த ராஜ்யத்திலே எல்லா மக்களும் ஆவலோடு இருக்கிறார்கள் அதைப்பற்றி— கேட்டேன் ; அதைப்பற்றி மந்திரியவர்கள் ஏதாவது சொன்னால் தேவலை.

The Hon. Sri P. KAKKAN : கனம் கோவிந்தசாமியவர்கள் ஒதுக்கிய பணம் செலவழிக்கப்படவில்லை என்று குறை சொன்னார்கள். அதற்காகத் தான் சொல்கிறேன், டிசம்பர் 59 வரை கணக்கு கொடுத்திருக்கிறோம் ; மார்ச்சு 60 வரும்போது, பூரா பணமும் செலவாகிவிடும்.

Sri R. SRINIVASA IYER : சேது ரஸ்தாவைப் பற்றிச் சொன்னார் கள் ; அதைப்பற்றிக் கேட்கிறார்கள். இந்த சர்க்கார், சேதுரஸ்தாவை கொண்டுவரவேண்டும் என்று திட்டமிட்டு, அதற்காகவே ரூ. 5 கோடியை மூன்றாவது திட்டத்தில் சேர்த்திருக்கிறது. இப்பொழுது தமிழ்நாடு காங்கிரஸ் தலைவராகவும், முன்பு மத்திய சர்க்காரில் ரயில்வே உதவி மந்திரியாகவும் இருந்த, கனம் ஓ. வி. அழகேசன் அவர்கள் ரொம்ப பிரயத்தனம் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே இந்த சேதுரஸ்தாவை அமைக்க, நம் மாநிலத்தின் போக்குவரத்தைச் சீர் செய்ய, இந்த ரோடினைப் போட தக்க ஏற்பாடு செய்யப்படும் என்று தெரிவிக்கிறேன். மத்திய சர்க்காரும், நிச்சயமாக ஆதரவு கொடுப்பார்கள் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. அங்கத்தினர்களுக்கும் அந்த நம்பிக்கை இருக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். முன்னர் நம்பிக்கை வேண்டும். "நம்பினோர் கெடுவ தில்லை, நான்குமறைத் தீர்ப்பு" என்பது முதியோர் வாக்கு. முன்பு நாட்டின் சுதந்திரத்திற்காக நாம் முயற்சி செய்த காலத்திலும், நம்பிக்கை இல்லாதவர்கள் இருந்தார்கள். இப்பொழுதும் கூட அவர்களுக்கு நம் பிக்கை வரவில்லை. (சிரிப்பு) ஆகவே, எல்லோரும் நம்பிக்கை வைத்து, இந்த நாடு முன்னேற வழி வகை செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டு முடிக்கிறேன்.

Mr. SPEAKER: Is the hon. Member Sri Govindasamy withdrawing his cut motion ?

Sri A. GOVINDASAMY : I am pressing it, Sir.

Mr. SPEAKER: The question is—

'That the allotment of Rs. 7,46,55,800 under Demand XXVI—Civil Works—Works be reduced by Rs. 100.'

The cut motion was put and lost.

Mr. SPEAKER: The question is—

'That the Government be granted a sum not exceeding Rs. 7,46,55,800 under Demand XXVI—Civil Works—Works'.

The Demand was put and carried and the Grant was made.

The cut motion moved by the hon. Member Sri V. K. Kothandaraman under Demand XXVII was by leave withdrawn.

Mr. SPEAKER: The question is—

'That the Government be granted a sum not exceeding Rs. 1,42,30,200 under Demand XXVII—Civil Works—Establishment and Tools and Plant'.

The Demand was put and carried and the Grant was made.

Mr. SPEAKER: Is the hon. Member Sri Govindasamy withdrawing his cut motion?

Sri A. GOVINDASAMY: I am pressing it, Sir.

Mr. SPEAKER: The question is—

'That the allotment of Rs. 3,70,32,700 under Demand XLI—Capital Outlay on Civil Works be reduced by Rs. 100'.

The cut motion was put and lost.

Mr. SPEAKER: The question is—

'That the Government be granted a sum not exceeding Rs. 3,70,32,700 under Demand XLI—Capital Outlay on Civil Works'.

The Demand was put and carried and the Grant was made.

DEMAND XXVIII—CIVIL WORKS—GRANTS-IN-AID.

The Hon. Srimathi LOURDHAMMAL SIMON: Mr. Speaker, Sir, on the recommendation of the Governor, I move:

'That the Government be granted a sum not exceeding Rs. 1,72,03,000 under Demand XXVIII—Civil Works—Grants-in-Aid'.

Sri V. K. KOTHANDARAMAN: Mr. Speaker, Sir என் பெயரால் உள்ள வெட்டு பிரோரணையை நான் பிரேரேபிக்கிறேன்.

'That the allotment of Rs. 1,72,03,000 under Demand XXVIII—Civil Works—Grants-in-Aid be reduced by Rs. 100'.

Mr. SPEAKER: The Demand and the cut motion are before the House for discussion.

The Hon. Srimathi LOURDHAMMAL SIMON: Sir, I have already circulated a detailed Note explaining the policy underlying this Demand and the working of the Department of Local Administration. Hence, I do not desire to take up the time of the House by making an opening speech. I shall give my views on the various points that may be raised on this Demand and also give further information that may be required by hon. Members in their speeches in my reply.

22nd April 1960]

Mr. SPEAKER : கனம் மந்திரி அவர்களுக்குப் பதில் அளிக்க அரை மணி நேரம் போதுமா ? ஆகவே கனம் அங்கத்தினர்கள் ஒவ்வொருவரும் பத்து நிமிஷம் மட்டும் பேசும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். இப்பொழுது கனம் துரைசாமி ரெட்டியார் பேசுவார்.

Sri B. DORAISAMI REDDIAR : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த லோகல் போர்டு சம்பந்தமாக ஒன்றிரண்டு கருத்துக்களைச் சொல்ல நான் ஆசைப்படுகிறேன். டிஸ்ட்ரிக்ட் போர்டு இருந்தால் பணம் அதிகமாகச் செலவு ஆகிறது என்று சொல்லப்பட்டு அதை எடுத்து விட்டு பொது மக்களுக்குத் தேவையான சேவை செய்ய டிஸ்ட்ரிக்ட் போர்டால் முடியாது என்று சிறு சிறு பிர்க்காக்களாகப் பிரித்து அதன் திட்டங்களையெல்லாம் பஞ்சாயத்து மூலமாக நடத்தினால் அந்த பிர்க்காக்களுக்கு போதுமான வசதி அளிக்க முடியும் என்ற நோக்கத்தில் டிஸ்ட்ரிக்ட் போர்ட் கலைக்கப்பட்டது. ஆனால் இப்பொழுது இருக்கும் பஞ்சாயத்து பிரசிடெண்டுகள் பஞ்சாயத்து நிர்வாகத்தை நன்றாக திறமையாக நடத்துகிறார்களா என்று பார்க்கும்போது ஒரு சிலர் ரொம்ப திறமையாக நடத்துகிறார்கள். நூறுக்கு இருபது பேர்களைத் தவிர மற்ற ப்ரெசிடென்ட்கள் எல்லோரும் நல்ல முறையில் அந்த நிர்வாகத்தை நடத்தவே இல்லை. நடத்தவும் முடியாது என்பது என்னுடைய கருத்து. பஞ்சாயத்துக்காக கொடுக்கப்பட்ட சில புஸ்தகங்களை சில பிரசிடெண்ட்கள் அவைகள் கெட்டு விடுமோ தொட்டால் என்ற அளவில் இருக்கிறார்கள். அதனால் அவற்றில் கையைக்கூட வைப்பதாகத் தெரியவில்லை. அந்த புஸ்தகங்களை வெகு ஜாக்கிரதையாக வைத்துக்கொண்டிருக்கிறார்கள். அந்தந்த கிராமங்களில் யார் யாருக்கு நல்ல வசதி இருக்கிறதோ அவர்கள்தான் பஞ்சாயத் பிரசிடெண்டாக வர முடிகிறது. படிக்காதவர்கள் அப்படி பிரசிடெண்டாக வருகிறார்களேயொழிய திறப்பட வேலை செய்யக்கூடியவர்கள் வரமுடிவதில்லை. டிஸ்ட்ரிக்ட் போர்டுகள் நல்ல முறையில் வேலை செய்ய முடியவில்லை என்று சர்க்கார் கருதி பஞ்சாயத்து மூலமாக நல்ல முறையில் கிராமவாசிகளுக்கு வேலை செய்யலாம் என்ற நோக்கத்தில் இந்த டிஸ்ட்ரிக்ட் போர்டுகளை கலைத்து பஞ்சாயத்துக்கள் அமைக்கப்பட்டன. இந்த அமைப்பால் கொஞ்சம்கூட பலன் கிடைக்கவில்லை என்பதுதான் என்னுடைய கருத்து. சில டிஸ்ட்ரிக்ட் போர்டுகள் இன்னும் கலைக்கப்படவில்லை. நானும் மெம்பராக இருக்கிறேன். மெம்பராக இருந்துகொண்டு கலெக்டரைப் போய் கேட்டால் "நீங்கள்தான் அட்வைசரி கமிட்டி மெம்பராக இருக்கிறீர்களே, இஷ்டப்பட்டால் சார்சார்ஜ் கொண்டு வந்து விடலாம். பிரசிடெண்டாக இருந்தால் சாதாரணமாக தைரியமாக செய்துவிடலாம், ஆனால் நாங்கள் ஆபீசர்களாக இருக்கிறோம், எங்களால் செய்யமுடியாது. நாங்கள் தவறுகள் செய்தாலும் அது கிராமவாசிகளுக்குக் கஷ்டமாக இருக்கும், ஒரு கிராமத்திற்கு நல்ல வசதி செய்ய வேண்டும் என்று நாங்கள் நினைத்தால் எங்களால் செய்ய முடியாது, ஆகவே நீங்களே செய்யுங்கள்" என்ற அளவில் கலெக்டர் சொல்லுகிறார். அந்த முறையில் வேலை செய்யாமல் நிறுத்தி விடுகிறார்கள். அவர்கள் தங்களுடைய கொள்கைகளைச் செய்யும்போது ரொம்பவும் பணிவுடன் செய்ய வேண்டியதாக இருக்கிறது. இந்த நிலைமையில் டிஸ்ட்ரிக்ட் அலுவல்களையெல்லாம் பஞ்சாயத்துக்களுக்குக் கொடுக்க வேண்டும் என்ற அளவில் டிஸ்ட்ரிக்ட் போர்டை கலைத்துவிட்டு பஞ்சாயத்து பிரசிடென்டிடம் கொடுத்திருக்கிறோம். அந்த அடிப்படையில் தீர்மானித்து இருக்கிறோம். டிஸ்ட்ரிக்ட் போர்ட் இருக்கிற காலத்தில் ஒரு வேலை செய்ய வேண்டுமானால் கவர்ன்மெண்ட் 50 பர் செண்டும், டிஸ்ட்ரிக்ட் போர்ட் 25 பெர் சென்டும் உழைப்பின் மூலமாக 25 பர் செண்டும் கொடுக்கப்படும் என்று சொல்லப்பட்டது. டிஸ்ட்ரிக்ட் போர்டு கலைக்கப்பட்ட பின் அந்த நிலைமை இல்லாமல் போய் விட்டது. இப்பொழுது ரொம்பவும் சிரமமாக இருக்கிறது. கட்டிடம் கட்ட வேண்டுமானாலும், ரோடுகள் போட வேண்டுமானாலும், வாசகசாலை கட்ட வேண்டுமானாலும் இப்பொழுது முடியவில்லை. முன்பு இவைகளையெல்லாம் செய்து கொள்வதற்கு நல்ல முறையில் மிக எதுவாக இருந்தது. இப்பொழுதுள்ள நிலைமைப் பிரகாரம் 50 பெர் சென்ட்தான் கொடுக்கிறார்கள். பாக்கி 50 பர் செண்ட் கிராமத்திலுள்ளவர்கள் கொடுக்க வேண்டி

[Sri B. Doraisami Reddiar] [22nd April 1960

யதாக இருக்கிறது. பொது மக்கள் போட்டுக்கொண்டு செய்ய வேண்டும். அந்த அடிப்படையில் இருப்பதால் பல வேலைகளைச் செய்ய முடியவில்லை. காரணம் சிறிய கிராமங்களாக இருந்தால் செய்துகொள்ள முடிவதில்லை, பெரிய கிராமங்களாக இருந்தாலும் அல்லது பணக்கார கிராமங்களாக இருந்தாலும் அப்படி செய்து கொள்ள முடியாது. மற்றபடி சிறிய ஏழை கிராமமாக இருந்தால் இப்படிப்பட்ட வேலைகளையெல்லாம் செய்துகொள்ள முடிவதில்லை. ரொம்பவும் கஷ்டமாக இருக்கிறது. ரோடுகள் போட்டுக் கொள்ள வேண்டுமானாலும் போட்டுக்கொள்ள முடியவில்லை. டிஸ்ட்ரிக்ட் போர்டாக இருந்தபோது இதற்கு என்று தனியாக பணம் ஒதுக்கி போட்டு வந்தார்கள். இப்பொழுது ஒவ்வொரு டிபார்ட்மெண்டிற்கும் தனித்தனி யாக பணம் ஒதுக்கி இருக்கிறார்கள். ரோடு பார்மிங்குக்கு இவ்வளவு, மரா மத்துக்கு இவ்வளவு என்று இப்படி தனித்தனியாக ஒதுக்கி வைத்திருக் கிறார்கள். கட்டிடங்கள் கட்டுவதற்கு இவ்வளவு என்று ஒதுக்கி வைக்கிறார் கள். அதனால் ரோடுகள் போட வேண்டும் என்று கேட்டால், கட்டிடம் கட்டுவதற்காகத்தான் பணம் இருக்கிறது என்று சொல்லுகிறார்கள். பள்ளிக்கூடம் கட்ட வேண்டும் என்றால் அதற்கு பணம் இல்லை என்று சொல்லப்படுகிறது. ஒரு இடத்தில் ஸ்கூல் கட்டிடம் கட்ட வேண்டுமென்றால் அதற்குப் பணம் கிடைக்காது. அந்த அளவில் இப்பொழுது நிலைமை இருக் கிறது. இந்த முறையை மாற்றி அமைக்க வேண்டியதாக இருக்கிறது. பொதுத் துறையிலிருந்து பணத்தை எடுத்து இவற்றையெல்லாம் செய்ய வேண்டியதாக இருக்கிறது. அங்குள்ளவர்களுக்குத்தான் அந்தந்த கிரா மத்திலுள்ள வசதிகளையும், கஷ்டங்களைப்பற்றியும், தேவைகளைப்பற்றியும் தெரியும். ஆகவே இந்த முறையைத் தவிர்க்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

டிஸ்ட்ரிக்ட் போர்ட் இருந்த காலத்தில் எந்த எந்த இடங்களுக்கு, எந்த எந்த ஆசிரியர்கள் தேவை என்பது நன்றாகத் தெரியும். வேலை செய்யக் கூடிய ஊழியர்கள் யார் என்பதெல்லாம் அவர்களுக்குத்தான் நன்றாகத் தெரியும். எந்த ஆசிரியர் எந்த முறையில் வேலை செய்வார் என்பதெல் லாம் நன்றாகத் தெரியும். டிஸ்ட்ரிக்ட் போர்ட் இருந்த காரணத்தால் அதற்குத் தக்க ஏற்பாடுகள் செய்து விடலாம். ஆனால் பிர்க்காவாக இருப்ப தால் பஞ்சாயத்துகளுக்கு விடுவதால் ஆசிரியர்கள் நிலைமை சரியாக இல்லை. பிரசிடெண்ட் தனியாக இருப்பார், மெம்பர்களும் ஆசிரியர்களும் தனியாக இருப்பார். அவர்களுக்குள் ஒத்துழைப்பு இல்லாமல் இருக்கும்.

Sri M. R. KANDASWAMI MUDALIAR: Sir, on a point of order, இப்பொழுது நடந்து கொண்டிருக்கக் கூடிய மானியம் சிவில் வொர்க்ஸ். அதில் ஆசிரியர்கள், நிர்வாக ஊழியர்கள் இவைகள் எல்லாம் வரலாமா ? அப்படி அவைகளைப்பற்றி பேசுவது என்பது பார்லிமெண்டரி முறையா என்பதைப் கேட்க விரும்புகிறேன்.

Mr. SPEAKER: பேசத்தான் கூடாது. ஆனால் கனம் அங்கத்தினர் பேசுகிறாரே என்ன செய்வது. ஸ்ட்ரிக்டாக பார்க்கப்போனால் அப்படிப் பேசுவது சரியல்லதான்.

Sri B. DORAISAMI REDDIAR: இது டிஸ்ட்ரிக்ட் போர்டைப் பற்றியது எம்.எல்.ஏ.க்களைப்பற்றியது அல்ல.

Sri K. ANBAZHAGAN: Sir, On a point of information.

Mr. SPEAKER: The hon. Member cannot rise on a point of information. He can rise only on a point of order.

Let the hon. Member, Sri Doraiswami Reddiar, continue his speech and let no hon. Member interrupt him.

22nd April 1960]

**SRI B. DORAISAMI REDDIAR:** இப்படி பாயிண்ட் ஆப் ஆர்டர், பாயிண்ட் ஆப் இன்பர்மேஷன் கேட்டே எனக்கு எழு நிமிஷங்கள் போய் விட்டன. இருப்பது பத்து நிமிஷங்கள் தான். நான் பேசி முடிந்த பிறகு கடைசியில் கேட்டு தெரிந்து கொள்ளலாம். டிஸ்ட்ரிக்ட் போர்ட் சம்பந்தப்பட்ட மட்டில் ஒன்றிரண்டு பேசலாம். அதற்குள் பாயிண்ட் ஆப் ஆர்டர் பாயிண்ட் ஆப் இன்பர்மேஷன் எல்லாம் வந்து விடுகிறது. பஞ்சாயத்துக்களுக்குக் கொடுக்கப்படக்கூடிய பணத்தை நல்ல முறையில் செலவு செய்ய வேண்டியதாக இருக்கிறது. அதற்கு என்று ஒரு ஆபீசரை ஏற்படுத்தவேண்டும். யூனியன் பஞ்சாயத்துக்களாக அமைத்து அதற்கு வேண்டிய திட்டங்களைப் போட்டு அலுவல்களைச் செய்ய வேண்டும், என்ற கருத்துடன் சில சட்டங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. இப்பொழுது லோகல் போர்டுக்கு ஒதுக்க வேண்டிய நிதி போதுமான அளவில் இல்லை. அதனால் எல்லோரும் குறை சொல்ல வேண்டிய காரணமாக இருக்கிறது. ஆகவே கூடுமான வரையில் நமது கனம் அமைச்சர் அவர்கள் இன்னும் கொஞ்சம் அதிகமான பணத்தை ஒதுக்க வேண்டும் என்று சிபார்சு செய்யும்படி கேட்டுக்கொண்டு என்னுடைய சிற்றுரையை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

* **SRI A. R. SUBBIAH MUDALIAR:** கனம் தலைவர் அவர்களே, இந்த மானிய கோரிக்கையின் மீது சில வார்த்தைகளைக் கூற விரும்புகிறேன். பஞ்சாயத்துக்களுக்கு, முனிசிபாலிட்டிகளுக்குக் கொடுக்கக் கூடிய உதவி தொகை இந்தக் மானியப்படி பார்த்தால் $1\frac{3}{4}$ கோடி. அதில் $1\frac{1}{4}$ கோடி ரோடுகள் பராமரிப்பதற்கு செலவு செய்யவேண்டியதாக இருக்கிறது. போக்குவரத்து நல்ல முறையில் இருக்கவேண்டும். இந்த மானியத் தொகையை பிரித்துக்கொடுக்கும்போது கிராம ரஸ்தாக்களை செப்பனிடுவதற்கு போதிய பணம் இல்லை என்பதை நான் மிக வருத்தத்துடன் தெரியப்படுத்திக்கொள்ளுகிறேன். Panchayat half grant வேலைக்கு 5 லட்சம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. ஐந்து லட்சம் grant காணாமல் பல வேலைகள் அரை குறையாக நின்று அடுத்த வருடத்தில் பூர்த்திசெய்யப்படுகிற நிலைமை ஏற்படுகிறது. ஒவ்வொரு பஞ்சாயத்திலும் half grant works எடுத்த நல்ல முன்னேற்றத்தில் இருந்துகொண்டிருக்கிறது. சில விதிகளை திருத்த வேண்டிய நிலையில் இருக்கிறது. இருபது வருஷத்துக்கு முன்னால் ஏற்படுத்தப்பட்ட விதியை வைத்துக்கொண்டு Half grant sanction செய்யப்படுகிறது. உதாரணமாக Road improvements என்றால் Connecting any main roads என்று இருந்தால்தான் sanction கொடுக்கிறார்கள். Culverts connecting main roads with village roads அதற்கும் Half grants கொடுக்க முடியும். அப்படி வரும்பொழுது அனேக கிராமங்களுக்கு கொடுப்பதற்கு தடை ஏற்படுகிறது. ஆகவே அந்த விதியை தளர்த்தவேண்டியது அவசியம். அடுத்தபடியாக District Board village road programme for improvement of village roads என்று தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது. வேடிக்கை என்னவென்றால் ஜில்லாவிற்கு 8 ஆயிரம் ரூபாய் வீதம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. மொத்தம் 88 ஆயிரம். அதைக்கொண்டு என்ன செய்வது என்பது தெரியவில்லை. District Boards வைத்து பூஜை செய்ய ஒதுக்கினார்களோ என்று நினைக்கிறேன். District Board-க்கு improvement of village roads என்ற தலைப்பின் கீழ் ஒரு ஜில்லாவுக்கு 8 ஆயிரம் வீதம் உதவினால் எந்த வகையில் பிரயோஜனம்? அதை கவனித்து இன்னும் கூடுதலாக ஒதுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதுபோல் New roads and improvement of the existing roads வகைக்கு C.R.F. திட்டத்தின் கீழ் செலவு செய்ய தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது. அந்த தொகை பெரும்பகுதி கிராமப் பகுதிக்குப் போய் சேரவில்லை. C.R.F.-ன் கீழ் District Board களுக்கு 17 லட்சம் ஒதுக்குவதாக கண்டிருக்கிறது. இதுவும் காணாது. ஏனென்றால் village road improvement அதனால்தான் நாடு முன்னேற வழி இருக்கிறது. C.R.F. ரூபாய் பூராவும் village road improvement-க்கு செலவழிப்பது நலம் என்று நினைக்கிறேன். Dustless surface road என்ற தலைப்பின்கீழ் 10 லட்சம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அமைச்சர் கக்கன் அவர்கள் அதை கிராம பகுதிக்கு ஒதுக்கப்படும் என்பதாக கொஞ்ச நேரத்துக்கு முன்பு அவருடைய பதிலில் இருக்கிறது. அறிக்கையை கவனிக்கும் பொழுது இது பூராவும்

Municipality-க்கு செலவழிக்கப்படும் என்று தெரிகிறது. அதுபோக 10 லக்ஷ ரூபாயும் Municipal area உள்ள road improvement-க்கு கடன் உதவி திட்டத்தின் கீழ் சாலைவ திக்காக ஒதுக்கப்பட்டிருக்கிறது. அந்த தொகை கிராமத்துக்குப் பிரயோஜனம் இல்லை. Mad as Panchyats Act படி Local road grants ஒரு நபருக்கு 40 நயா பைசா தொகை ஒதுக்கப்படுவதாக தெரிகிறது. இப்போது இருக்கக் கூடிய Deplorable condition of roads-ஐ போக்க என்ன வழி செய்து இருக்கிறார்கள் என்று தெரியவில்லை. மந்திரி அவர்களுடைய அறிக்கையில் 10-வது பக்கத்தில் "other district roads and village roads are in a very deplorable condition" ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். Deplorable Condition-ஐ மாற்ற என்ன செய்திருக்கிறார்கள். Local road grants தொகை ஒதுக்கப் போகிறோம் அதன்மேலும் village roads improvement ஆகும் என்று சொல்லுகிறார்கள். இன்னும் 1, 2 வருஷம் பொறுத்துக்கொள்ளக்கூடிய நிலைமை ஏற்பட்டால் roads-கள் இருக்காது. புது ரோடு போடவேண்டிய நிலைமை வந்துவிடும். District Board roads maintenance பற்றி கலெக்டரைக் கேட்டால் கைவிரிக்கிறார்கள். Road maintenance-க்கு ரூபாய் இல்லை என்று சொல்லுகிறார்கள். Maintenance-க்கு ஜில்லாவாரியாக 17 லட்சம் 18 லட்சம் தேவை என்று கலெக்டர்கள் எழுதிக்கொண்டிருக்கிறார்கள். உடனடியாக கிராம ரோடுகளை maintenance செய்யாவிட்டால் கொஞ்ச காலத்தில் ரோடுகளே இல்லாமல் புது ரோடு போடக்கூடிய நிலைமை ஏற்படும். C.R.F. பண்டிலிருந்து எப்படி பணம் ஒதுக்கப்படுகிறதோ அதுபோல் District Board roads செப்பனிட வழி செய்யவேண்டும்.

அடுத்தபடியாக Water-supply Scheme பற்றி சில வார்த்தைகள். இருபத்திரண்டு லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. மந்திரி அவர்களுடைய அறிக்கை 13-வது பக்கத்தில் அவர்களே நன்றாக விரிவாக சொல்லியிருக்கிறார்கள். "In exceptional cases where the local bodies are unable to finance the schemes either from their own funds or by taking loan from Government, the Government give grants for execution of the schemes" பல வருஷங்களாக சங்கரன் கோயிலுக்கு குடித் தண்ணீர் திட்டம் அங்கீகரிக்கப்பட்டு 18 லட்ச ரூபாய் Estimate போடப்பட்டிருக்கிறது. சர்க்கார் தரப்பில் இன்றுவரை ஒருவித நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. பொது ஜனங்கள்கூட உதவி கொடுக்க தயாராக இருக்கிறார்கள். சங்கரன்கோயில் தேவஸ்தானம் நிதியிலிருந்தும் உதவி பணம் கொடுக்க தயாராக இருக்கிறார்கள். அப்படி இருந்தும் அதைப்பற்றி கவனிக்காமல் இருப்பது வருந்தத்தக்கூடிய விஷயமாகும். ஒரு யாத்ரீகர் ஸ்தலத்திற்கு Local bodies உதவி கொடுக்க தயாராய் இருந்தும் அதைப்பற்றி ஒருவிதமான முடிவும் எடுக்கப்படவில்லை. சில இடங்களில் Water Supply Scheme தாமதப்படுவதற்கு காரணம் உதவித் தொகை வராதது. குடித் தண்ணீராவது மக்களுக்கு கொடுக்கவேண்டியது சர்க்கார் கடமை. அப்படி இருக்கும்போது குடித் தண்ணீர் திட்டத்துக்கு ஜனங்களிடமிருந்து உதவி கேட்பது பொருத்தம் இல்லை. மக்களுக்கு உணவு, உடை குடி தண்ணீர் கொடுக்கப்படவேண்டியது நம் கட்சியின் கோட்பாடு. குடித் தண்ணீர் கொடுக்கவேண்டியது நம் கடமை. அப்படி இருக்கும்பொழுது குடி தண்ணீருக்குகூட ஜனங்களிடமிருந்து உதவி கேட்பது ரொம்பவும் பொருத்தம் அல்ல என்று தெரியப்படுத்திக் கொள்கிறேன். சமீபத்தில் Estimates Committee அறிக்கையில் அழுத்தம் திருத்தமாக உதவித்தொகை கேட்கக் கூடாது என்று சொல்லப்பட்டிருக்கிறது. Water-supply Scheme-க்கு உதவித்தொகை எதிர்ப்பாராமல் உடனடியாக செய்ய வேண்டியது நம் கடமை என்பதைத் தெரியப்படுத்திக் கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

SRIMATHI RAJATHI KUNCHITHAPATHAM : தலைவர் அவர்களே, இந்த மான்யக் கோரிக்கையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இங்கே தரப்பட்டிருக்கிற அறிவிப்பிலிருந்து தேசீய பெருஞ்சாலைகள், மாநில பெருஞ்சாலைகள், மாவட்ட பெருஞ்சாலைகள் தவிர மற்ற மாவட்டத்திலுள்ள இதர பெருஞ்சாலைகளுக்கும், கிராம

சாலைகளுக்கும் இதில் வகை செய்யப்பட்டிருக்கிறது மிகவும் வரவேற்கத் தக்க ஒரு அம்சம். சென்னை மாநிலம் விவசாயத்தில் மட்டும் அகில இந்தியாவிலும் முதன்மையாக நின்று விடவில்லை. மின்சாரம் கொடுப்பதிலும் முன்னோடியாக நின்றுவிடவில்லை. சாலையைப் பழுதுபார்த்து சாலை போக்குவரத்திலும் முதன்மையான ஸ்தானத்தில் இருப்பது நாம் எல்லாம் பெருமைப்படக் கூடிய விஷயமாகும். இந்த பெருஞ்சாலைகளைப் பற்றி முன்னேற்றமான நிலையில் இருக்கும்போது கிராம சாலையைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். கிராமத்துக்கு 10 லட்சம் மட்டும் தான் ஒதுக்கப்பட்டிருக்கிறது என்று கடைசியில் கூறப்பட்டிருக்கிறது. அதாவது தேசீய அபிவிருத்தி பகுதிகளிலும் சமுதாய அபிவிருத்தி பகுதிகளிலும் ஸ்தல அபிவிருத்தி திட்ட பகுதிகளிலும் அமைக்கப்பட்ட கிராமச் சாலைகள் மிகவும் நல்ல நிலையில் இல்லை என்று அமைச்சர் அவர்களே ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். அதற்கு மேலும் பஞ்சாயத்து யூனியன்களுக்கு மாற்றுவதற்கு முன்பு அதை நன்றாக பழுது பார்த்து 10 லட்சம் செலவழித்து ஒரு நல்ல முறையில் கொடுப்பதற்காக ஏற்படுத்தப்பட்ட திட்டமாக இருந்தாலும், 10 லட்சம் என்பது எனக்குமுன் பேசிய அங்கத்தினர்கள் குறிப்பிட்டது போல் 10 லட்சம் போதாது என்பது தான் என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். 10 லட்சம் என்பது கடலில் காயத்தை உரைத்தால்போல் ஆகும். நம் மாநிலத்தில் எத்தனையோ கிராமங்கள் இருக்கின்றன. அதிலும் கிராமப் பகுதிகளை எடுத்துக்கொண்டால் ஸ்தல ஸ்தாபன வேலை திட்டங்களின்கீழ் அமைக்கப்பட்ட சாலைகள் இப்போது மண்வெட்டு வேலை நடந்த இடங்களில் மண்வேலை நடந்ததா என்று கேட்கக்கூடிய நிலையில் மண் அரிக்கப்பட்டு, கிடங்குகளும் பள்ளங்களுமாக இருக்கிற நிலையில் கிராம மக்கள் மிகவும் சிரமப் படுகிறார்கள் என்பதை எடுத்துக் கூற விரும்புகிறேன்.

ஆகவே, இந்த 10 லட்சம் போதாது. இன்னும் அதிகம் இதற்கு 12 noon.
ஒதுக்க வேண்டும். அதோடு நம்முடைய கொள்கையே விவசாயம்தான் நம்நாட்டுக்கு அச்சாணி போன்றது என்பதாகும். மனிதனுக்கு முதுகெலும்பு எப்படி அவசியமோ அது போன்று நாட்டுக்கு விவசாயம் அவசியம். முதுகெலும்பும் ரத்தக் குழாய்களும் சரிவர வேலை செய்தால் தான் மனிதன் நல்லபடி வாழ முடியும். அது போன்று நாட்டில் சுபீட்சம் ஏற்பட வேண்டுமென்றால் விவசாயமும், அதில் ஈடுபட்டிருக்கின்ற விவசாயிகளும் நல்ல நிலைமையில் இருக்கும்படி பார்த்துக்கொள்வது அவசியம். விவசாயம் அபிவிருத்தி அடைய ரோடுகள் தேவை என்பதை யாரும் மறுக்க மாட்டார்கள். பெரிய நெடுஞ்சாலைகளைமட்டும் பார்த்துக் கொண்டிருந்தால் போதாது. அவைகளைப் பார்த்துவிட்டு கிராமப்புறங்களில் இருக்கின்ற ரோடுகளும் இது போன்றுதான் இருக்கும் என்று எண்ணுவது தவறு. எப்படி சென்னையில் இருக்கின்ற ஒருவரையோ, டில்லியில் இருக்கின்ற ஒருவரையோ, கல்கத்தாவில் இருக்கின்ற ஒருவரையோ பார்த்துவிட்டு கிராமத்தில் இருக்கின்ற எல்லோரும் இப்படித்தான் இருப்பார்கள் என்று நினைப்பது தவறோ, அது போன்றது. நாட்டுப்புறங்களில் இருக்கின்ற நிலைமை பட்டணங்களில் இருக்கின்ற நிலைமையிலிருந்து முற்றிலும் மாறுபட்டவை. நாட்டுப்புறங்களில் இருக்கின்ற நிலைமைகளை கவனித்து அவைகளைச் சீர்திருத்தாமல் இருந்தால் பட்டணங்களில் வாழும் மக்களுக்கு சோறு கிடைக்காது. கிராமப்புறங்களில் மக்கள் மிகமிக மோசமான நிலைமையில் இருக்கிறார்கள். அவர்களுடைய கட்டை வண்டிகளும் மொட்டை வண்டிகளும்கூட போக அங்கு சரியான ரோடு வசதி இல்லை. அங்கு உற்பத்தியாகும் விவசாய பொருள்கள் இப்படிப்பட்ட வண்டிகளில்தான் நமக்கு வர வேண்டும். ஆகவே நம்முடைய வீட்டு பானைகளில் பச்சை அரிசி வேக வேண்டுமென்றால் கிராமப்புறங்களில் ரோடு வசதி இருந்தால் தான் முடியும். ஆகவே இவ்வளவு முக்கியமான ஒரு காரியத்திற்கு 10 லட்சம் போதாது. மேலும் கிராமங்களில் இருக்கின்றவர்களுக்கு பலவிதமான இடைஞ்சல்கள் இருக்கின்றன. கிராமப்பகுதியிலே இப்போது பஞ்சாயத்து யூனியன் வருகிறது. நபர் ஒன்றுக்கு 40 ந.பை. கொடுக்கப்போவதாக சொல்லப்படுகிறது. அதுவும் 1960 அக்டோபருக்கு

[Srimathi Rajathi Kunchithapatham] [22nd April 1960

மேல்தான் வருகிறது. அதுவரையில் மக்கள் காத்துக்கொண்டு இருக்க வேண்டுமா என்று தெரியவில்லை. இப்பொழுது எல்லாம் கிராமப் புறங்களுக்கு நிறைய பஸ் வசதி செய்து கொடுக்கிறார்கள். அப்படி செய் வதால் கிராமங்களில் உற்பத்தி ஆகின்ற விவசாய பொருள்கள் நகரப் புறங்களுக்கு சீக்கிரமாயும் குறைந்த செலவிலும் வந்து சேரும். இந்த சமயத்தில் கிராமங்களுக்கு சரியான ரோடு இல்லை என்றால் இந்த பஸ் வசதியை கிராம மக்கள் அடைய முடியாமல் போய் விடுகிறது. போலீஸார் கிராமப்புறங்களில் ரோட்டுகள் அமைத்திருக்கிறார்கள். 1956-ல் என் தொகுதியிலும் அவர்கள் ஒரு ரோட்டு அமைத்திருக்கிறார்கள். மற்றும் பாரத் சேவக் சமாஜத்தார் ஒரு ரோட்டு போட்டு இருக்கிறார்கள். இந்த இரண்டு ரோடுகளும் போட்டது போட்டபடியே இருக்கிறது. மேற்கொண்டு அவைகளை பழுது பார்க்காததினால் அவைகள் இன்று மோசமான நிலை மையில் இருக்கின்றன. உணவு உற்பத்தியை பெருக்குவதற்காக இன்று சர்க்கார் உரம், விதை, விவசாயத்திற்கு வேண்டிய கருவிகளை மக்களுக்கு கொடுத்து உதவி வருகிறார்கள். ஆனால் ரோடு வசதி இல்லாத காரணத் தால் இவைகள் நிலங்களுக்குப் போய் சேர முடியாத நிலைமை இருக்கிறது. சில இடங்களில் பாலம் இல்லாததாலும் கிராம மக்கள் கஷ்டப்படுகிறார்கள். பெண்கள் நிலத்திற்கு போட வேண்டிய உரங்களை தலைச்சுமையாக எடுத்துக் கொண்டு போக வேண்டிய நிலைமை அநேக கிராமங்களில் இருக்கின்றது. வண்டிக் கணக்கில் உரத்தை கொண்டு போய் போட்டு சரியான பலனை எடுக்க முடியாமல் இருக்கும்போது, தலைச் சுமையாக உரத்தை கொண்டு போய் போட்டு விவசாயத்தை அபிவிருத்தி செய்ய முடியுமா? ரோடுகள் எவ்வளவு முக்கியம் என்பதை எடுத்துக்காட்டவே நான் இவைகளை எல்லாம் கூறினேன். ஆகவே கிராமங்களுக்கு ரோடு அமைக்க 10 லட்சம் போதாது இன்னும் அதிகமாக ஒதுக்க வேண்டுமென்று வலியுறுத்தி சொல்ல விரும்புகிறேன். பாலங்களைப்பற்றி சில வார்த்தை கூற விரும்புகிறேன். திருநெல்வேலியில் மேலப்பாளையத்திற்கும் கருப்பந்துறைக்கும் இடையே பாலம் போடுகிறார்கள். இது இன்னும் தாமதப்பட்டுக் கொண்டிருக்கிறது. கனம் சீப் இஞ்சினீயர் அவர்களைப் பார்த்து பாதுகாப்பு சுவர் அமைக்க வேண்டும் என்று சொன்னேன். இல்லாவிட்டால் தாம்பரபரணியில் பெரும் வெள்ளம் வரும்போது மக்கள் தண்ணீரில் முழுக வேண்டிய நிலைமை ஏற்படும். அப்படிப்பட்ட ஆபத்து ஏற்படக்கூடாது என்பதற்காக சொல்கிறேன். இது சம்மந்தமாக அமைச்சர் அவர்கள் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். திருநெல் வேலியில் சுலோசன முதலியார் பாலம் இருக்கிறது. இது 100 வருஷங் களுக்கு முன்னால் கட்டப்பட்டதாக இருந்தாலும் இன்னும் பலம் பொருந்தி யதாக இருக்கிறது. இதை இன்னும் அகலப்படுத்த வேண்டும். இப் போது போக்குவரத்து அதிகமாகி விட்டபடியால் இந்த பாலத்தின் நெரி சல் அதிகமாக இருக்கிறது. ஒரு காரும் வண்டியும் எதிர்எதிராக வந் தால் அவைகள் சுலபமாக கடந்து செல்ல முடியாத நிலைமை இருக்கிறது. இதில் பாதசாரிகள் போக இடம் அமைத்துக் கொடுக்காததினால், அவர்கள் இந்த பாலத்தை கடந்து செல்வது சிரமமாக இருக்கிறது. மதுரைப் பாலத்தை அகலப்படுத்தி பாதசாரிகள் போக வசதி செய்து கொடுத்திருப் பதுபோல் இந்த பாலத்தையும் அகலப்படுத்தவேண்டுமென்று கனம் சீப் இஞ்சினீயர் அவர்களை கேட்டுக்கொண்டேன். அவர் இந்த பாலத்தில் கைவைக்க பயமாக இருக்கிறது. அதிகப்படியான செலவை வைத்து விட் டால் என்ன செய்கிறது என்ற அச்சத்தை தெரிவித்துக்கொண்டார். பயப்படாமல் பல்துறைகளில் முன்னேறி வரும் இந்த காலத்தில் செலவுக் காக பயந்து மிகவும் அவசியமான காரியத்தை கவனிக்காமல் இருக்கக் கூடாது. இதற்காக 100 கோடி செலவானாலும் இதை செய்ய வேண்டு மென்று அவரை கேட்டுக்கொண்டேன். அமைச்சர் அவர்களும் தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடி திருநெல்வேலி ஜங்ஷனில் நெரிசல் அதிகமாகி விட்டது. அரை மணிக்கு ஒரு முறை ரயில்வே கேட்டை (gate) அடைத்து விடுகிறார்கள். இந்த இடத்தில் ஒரு மேம்பாலம் அமைத்துக் கொடுக்க ஆவன செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பின்தங்கிய மாவட்டமாகிய ராம நாதபுரம் மாவட்டத்திற்கு 35 லட்சம் ரூபாய் ஒதுக்கி இருப்பதுபோல்

22nd April 1960] [Srimathi Rajathi Kunchithapatham]

ஒவ்வொரு மாவட்டத்தின் பின் தங்கிய பகுதிகளை எடுத்துக்கொண்டு அவைகளுக்கு பணம் ஒதுக்க வேண்டும். யாத்திரீக ஸ்தலங்களுக்கு 15 லட்ச ரூபாய் கொடுத்து இருப்பதாக சொன்னார்கள். பழைய குற்றாலத்திற்கு கனம் முதல் அமைச்சர் சென்றிருந்தபோது அதன் அபிவிருத்திக்காக ஏதோ ஏற்பாடு செய்திருப்பதாக அறிந்தோம். அதே மாதிரியான எத்தனையோ திட்டங்கள் திருநெல்வேலிக்கும் தேவை என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். அதோடு ஜில்லா போர்டுக்கு 8,000 ரூபாய் கொடுத்திருப்பது காணாது. ஒரு மூலைக்குகூட அது போதாது. ஜில்லா போர்டு வேலை என்றால் இப்போது கண்டிராக்டர்கள் எடுத்து செய்ய பயப்படுகிறார்கள். ஏனென்றால் அங்கே பண நெருக்கடி அவ்வளவு மோசமாகி விட்டது. இந்த நிலைமையால் அதிகப் பணம் அவைகளுக்கு ஒதுக்க வேண்டியது அவசியம் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். முனிசிபல் எல்லைக்குள் இருக்கின்ற சேரிகளின் நிலைமை மோசமாக இருக்கின்றது. சேரியில் இருக்கின்றவர்களும் மற்ற பகுதியில் வாழ்கின்ற மக்களைப்போல் வரி கொடுக்கிறார்கள். இருந்தாலும் சேரிகளுக்கு ரோட்டு, லைட்டு போன்ற வசதிகள் மிக, மிக குறைவு. மேலப்பாளையத்தில் மாரியம்மன் சேரி என்று ஒரு சேரி இருக்கிறது. அங்கு நல்ல ரோடு, குழாய் முதலியன இல்லை. பஞ்சாயத்து பகுதியில் அவர்கள் இருந்தால் இன்னும் நல்ல வசதிகளை பெற்றிருப்பார்கள். நகராண்மை பகுதியில் இருந்து அதிகப் படியான வரிகளையும் கொடுத்து அவர்கள் கண்ட பலன் ஒன்றும் இல்லை. ஆகவே அவர்கள் நகராண்மை கழகத்திலிருந்து பிரிந்து, வேறு பஞ்சாயத்துடன் சேருவதற்கும் அல்லது தனி பஞ்சாயத்துகளை அமைத்துக் கொள்வதற்கும் வழி செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். கடைசியாக என் தொகுதியில் இருக்கின்ற சிவலப்பேரி என்ற ஊருக்கு பல வருஷங்களாக பாலம் இல்லாமல் இருந்தது. 'செக்குக்கு பெண் கொடுத்தாலும் சிவலப்பேரியில் பெண் கொடுக்காதே' என்று சொல்வதுண்டு. காரணம் அந்த ஊருக்கு போவது அவ்வளவு கஷ்டம். அங்கு 54 ஆயிரம் ரூபாயில் Estimate போட்டு பாலவேலை நடந்தது. பதினைந்து ஆயிரம் ரூபாய்க்குமேல் செலவுசெய்த பிறகு திடீரென்று வேலையை நிறுத்தி விட்டார்கள். காரணம் அது Highways Department-யை சேர்ந்ததா அல்லது ஜில்லா போர்டை சேர்ந்ததா என்ற சின்ன தகராறுதான். இதற்காக இதை நிறுத்தாமல் அந்தப் பாலத்தை கட்டி முடிக்கவேண்டுமென்று சீப் எஞ்சினியர் அவர்களிடம் சொல்லி இருக்கிறோம். அமைச்சர் அவர்களும் இதை கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

*Sri K. ANBAZHAGAN: சட்ட மன்றத் தலைவர் அவர்களே, உதவித்தொகை மான்யத்தை குறித்து விவாதிக்கும் இந்த நேரத்தில், இந்த மான்யத்திற்கு அளிக்கப்பட்டு இருக்கின்ற பெயர் பொருத்தமான நல்ல என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இந்த மான்யத்தை அளிப்பதின் நோக்கம் உள்ளாட்சி மன்ற நிர்வாகத்துறையைப் பெரிய அளவில் இயங்கச் செய்யவும், இந்த உள் ஆட்சித்துறையின் நிர்வாகம் சரிவர செயல்படும்படிச் செய்யவும் ஆகும். உள்ளாட்சித் துறையைச் சீர்ப்படுத்த இந்த மான்யத்தொகை காரணமாக இருப்பதால், அடுத்த ஆண்டிலிருந்து உள் ஆட்சித்துறை மான்யம் என்ற பெயரால் இந்த மான்யம் வழங்கப்பட வேண்டும் என்று விரும்புகிறேன். இதன் முக்கியத்துவத்தை அமைச்சர் அவர்கள் உணர வேண்டும். இந்த நாட்டில் பஞ்சாயத்து ஆட்சி முறை வளர வளர நகராண்மைக் கழகங்கள், மாநகராட்சி மன்றங்களின் மதிப்பு உயர உயர, நாட்டு மக்கள் தங்களுடைய சொந்தப் பொறுப்பில் உள் ஆட்சியை ஏற்றுக்கொள்ள செய்ய இந்த உள் ஆட்சித் துறையை சரிவர சீரோடு இயங்கும்படிச் செய்வது சட்ட மன்றத்தின் பெரும் பொறுப்பாகும். அந்த முறையில் இந்த மான்யத்தொகையை பெயரிடப்பட்டு, பெரிய அளவினதாக மாற்றப்பட வேண்டும். நாம் இப்போது இந்த உதவித்தொகை பற்றி விவாதிக்கிறோம். உள் ஆட்சி மன்றங்களுக்கு அளிக்கப்பட்ட தொகையைப் பற்றிப் பேசும்போது அவர்கள் கேட்ட கடன்கள் எவ்வளவு, அளிக்கப்பட்ட தொகை எவ்வளவு, மறுக்கப்பட்ட தொகை எவ்வளவு என்பவைகளைப் பற்றிக் பேசுவது பொருத்தமாகும்.

ஆனால் அவைகளைப் பற்றி பேச வாய்ப்பு இல்லை. அவைகளைப் பற்றிய விவரங்கள் அனைத்தும் இதில் சேர்க்கப்பட வேண்டுமென்ற என் விருப்பத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன். கிராமங்கள் பெருவாரியாக உள்ள நம் நாட்டில் கிராம வளர்ச்சிக்கு இந்த உள் ஆட்சி மன்றங்கள் எப்படி எல்லாம் பணி புரிகின்றன என்பதைப் பற்றியும், என்னென்ன உதவி வேண்டும் என்பது பற்றியும் பல அங்கத்தினர்கள் விரிவாக எடுத்துச் சொன்னார்கள். ஆனால் இந்த கிராம வளர்ச்சிக்குத் துணையாக நாம் ஒதுக்கி இருக்கின்ற தொகை மிகவும் குறைவு. கிராமப் பஞ்சாயத்துக்கு அங்குள்ள மக்கள் தொகை அடிப்படையில் நபர் ஒன்றுக்கு 40 புதுக்காசு வீதம் கணக்கிட்டு ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதனால் பிற்பட்ட பகுதிகள் எல்லாம் மேலும் பிற்பட்ட பகுதிகளாக மாறவும், முன்னேறிய பகுதிகள் எல்லாம் மேலும் முன்னேற்றமடையவும் நேரும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். சாதாரணமாகப் பிற்பட்ட பகுதிகளில் மக்கள் தொகை குறைவாகத்தான் இருக்கும். அதன் காரணமாக அங்குள்ள பஞ்சாயத்துகளுக்குக் கிடைக்கும் உதவித் தொகையும் சிறிதாகத்தான் இருக்கும். பிற்பட்ட பகுதியான ராமநாதபுரமானாலும் சரி அல்லது அமைச்சர் ராமய்யா அவர்கள் வட்டாரமான புதுக்கோட்டையாக இருந்தாலும் அவைகள் முன்னேற வேண்டுமென்றால் உள் ஆட்சி மன்றங்களுக்கு அளிக்கப்படும் தொகையில் மாற்றம் ஏற்பட வேண்டும். "நபர்" அடிப்படையில் தரப்படும் தொகை உயர வேண்டும். ஸ்ரீரங்கம், காஞ்சிபுரம் போன்ற நகர சபைகள் (Pilgrim Tax) யாத்ரிகர்கள் வரி என்னும் வரியை விதிக்க அனுமதி வேண்டுமென்று கேட்டிருக்கின்றன. இது கொடுமையான வரி அல்ல. மக்களை கசக்கிப் பிழியும் வரியும் அல்ல. இந்த வரியைப் போடுவதற்கு அனுமதிக்கும் அதிகாரம், உரிமை டில்லி சர்க்காருக்குத்தான் இருக்கிறது. மாநில சர்க்காருக்கு இல்லை. இதில் சிபார்சு செய்யும் உரிமைதான் நமது மாநில அரசுக்கு. எனவே நமது மாநிலத்தில் இருக்கிற நகரசபைகள் சில வரிகளைப் போட்டு அதன் மூலம் தங்கள் வருவாயைப் பெருக்கிக்கொள்ள முன்வருமானால், அவர்களுக்கு வேண்டிய உதவித் தொகையை அவ்வப்போது கொடுத்து உதவி செய்ய வகை இல்லாத இந்த அரசாங்கத்தார் அவர்களுடைய கோரிக்கைக்காவது தடங்கலாக இல்லாது துணை புரியவேண்டும் என்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

குடி தண்ணீர் திட்டம் சம்பந்தமாக நகர சபைகளுக்கு சர்க்கார் கொடுத்திருக்கிற உதவித் தொகையைப் பற்றி அமைச்சர் அவர்கள் இங்கே குறிப்பிட்டுத் தெரிவித்து இருக்கிறார்கள். இன்னும் எத்தனை நகர சபைகளில் உதவி கேட்டு இருக்கிறார்களோ எனக்குத் தெரியாது. அவர்களுக்கு எல்லாம் கடன் தொகை அளிக்கப்பட்டிருந்தாலும், மறுக்கப்பட்டு இருந்தாலும் அதைப் பற்றியும் இங்கே குறிப்பிட்டு இருக்க வேண்டும். குறிப்பாக சேலம் ஜில்லாவில் இராசிபுரம், நாமக்கல், ஓமலூர் முதலிய நகர சபைகளில் தங்களூரில் உள்ள தண்ணீர் கஷ்டத்தைப் போக்குவதற்கு, தக்க திட்டங்களைத் தயார் செய்து வைத்துக்கொண்டு அடிக்கடி விண்ணப்பித்துக் கொண்டு வருகிறார்கள். அவற்றை எல்லாம் நிறைவேற்றுவதற்கு வழி காணவேண்டும் என்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

சென்னை நகரசபையை எடுத்துக்கொண்டால் இங்குள்ள குறைபாடுகளை எல்லாம் நிவர்த்திக்க வெண்டுமானால் அரசாங்கத்தின் உதவி அவசியம் என்பதை எடுத்துக் காட்டி அவர்கள் பத்துப் பன்னிரண்டு ஆண்டுகளாகவே தங்கள் குறைகளைச் சொல்லி வந்திருக்கிறார்கள். 1951-ல் இருபது லட்சம் ரூபாய் மானியம் தாருங்கள், ரோடுகள் எல்லாம் குழி விழுந்துகிடக்கின்றன. சோற்றிலே பூசணிக்காயை மறைப்பது என்று வேறு ஒரு காரியத்திற்காக அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். ஆனால் அங்கே பூசணிக்காய் அல்ல, ரோடுகளிலே ஓடுகிற வண்டிகளைக் கூட மறைக்கக் கூடிய நிலைமையில் பள்ளங்கள் விழுந்திருக்கின்றன. எனவே இவற்றைச் செப்பனிட வேண்டுமென்றால் 20 லட்சம் தாருங்கள் என்று நகர சபை கேட்டதற்கு சர்க்கார் 5 லட்சம் தான் கொடுத்தார்கள். அதுவும் 1955-ல் தொடங்கி, இந்தப் பணத்தைக் கொண்டு பாதைகளில் ஏற்பட்ட குழியைத் தூர்க்க மண் எடுத்துக்கொட்ட முடிகிறதே தவிர, அந்த ரோடுகளைச் சரியான முறையில் அமைத்து செப்பனிட்டுக் காக்க முடியவில்லை.

22nd April 1960] [Sri K. Anbazhagan]

அப்படி ரோடு போடுவதற்கும், அதைப் பராமரிப்பதற்கும் போதுமான தொகையை அரசாங்கம் தரமுடியாத நேரத்தில் இந்த அரசாங்கத்தில் இருக்கிற அமைச்சர்கள் நகரசபை நிர்வாகத்தைப் பற்றிக் குறை பேசுவதற்குச் சிறிதுகூட வெட்கப்படுவதில்லை. அதுவும் நிதி அமைச்சர் அவர்கள், பொறுப்புடன் தன் கடமையை உணர்ந்து நகரசபையின் நியாயமான கோரிக்கையை ஏற்றுக்கொண்டு நிதி தந்து உதவி செய்யவேண்டியவர்கள் தன் கடமையை உணர்ந்து நிதி உதவியும் அளிக்காது, மிகவும் சுலபமான முறையில் சட்ட மன்றத்தில் குறிப்பிட்டிருக்கிறார்கள். ''ஏற்கெனவே நகர சபை நிர்வாகத்தில் குறைகள் இருந்தது. இந்த ஆண்டு அவை வளர்ந்து பெருகியிருக்கிறது'' என்று. அவ்வாறு குறிப்பிட்டதில் அவர்கள் தன திறமையைக் காட்டினார். ஆனால் அதே நிதி அமைச்சர் அவர்கள் சட்ட மன்றத்தின் பேசும்போது, ''திராவிட முன்னேற்றக் கழகத்தினர் நகரசபைப் பொறுப்பை ஏற்றுக்கொண்டதன் பலன் என்ன ஆயிற்று? நகரசபை நிர்வாகத்தில் ஒரே நாற்றம் அடிக்கிறது'' என்று பேசி இருக்கிறார். அந்த நாற்றத்திற்கு எது காரணம் என்பதை அந்த அமைச்சர் தயவு செய்து எண்ணிப் பார்க்க வேண்டும். மாநகராட்சி மன்றத்தில் நடந்த பத்து ஆண்டு காங்கிரஸ் ஆட்சியில் நகரத்தின் சாக்கடைகள், அதில்சேரும் கழிநீர் பெருகிற்று. நகரத்தைச் சுத்தம் செய்ய சாக்கடை தேங்காமல் ஓடச் செய்ய வகையற்று இருந்தார்கள். ஊழல்களும், லஞ்சக் குற்றங்களும் நிர்வாகத்தில் அதிகரித்தன. லோகல் பண்டு ஆடிட் ரிப்போர்ட்டில் அவர்கள் எத்தனை இலட்சம் பணத்தை விழுங்கியிருக்கிறார்கள் என்ற குறிப்பு வந்திருக்கிறது. செல்வர் பலர் வரி செலுத்தாமலேயே இருந்திருக்கிறார்கள். தவறான சலுகைகள் காட்டப்பட்டிருக்கின்றன. பொது சுகாதாரத்தைக் காப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகள் சரியாக எடுத்துக்கொள்ளாத காரணத்தினால் கொசுக்கள் பெருகின. திராவிட முன்னேற்றக் கழகத்தார் பதவிக்கு வந்தவுடன் தங்கள் வீட்டில் இருந்து கொசுக்களைக் கொண்டு வந்து விட்டு விடவில்லை. பத்து ஆண்டு காலமாகவே நகரத்தில் சாக்கடைகள் பெருகியது. கழிவு நீர்ச் சாக்கடைத் திட்டத்தைப் பெரிய அளவில் உடனடியாக நிறைவேற்ற வேண்டும் என்று சர்க்காரிடம் பல முறை உதவிக்கு வந்தும் இவர்கள் அதை ஏற்காதது; அத்திட்டத்தை நிறைவேற்றாமல் விட்டு வைத்திருப்பது எல்லாமாகச் சேர்ந்துதான் இன்று சென்னை நகரத்தில் இந்தக் குறைகள் காணப்படுகின்றனவே தவிர, இவ்வாண்டு திராவிட முன்னேற்றக் கழகத்தினர் அங்கே வந்தவுடன் இவ்வளவும் உண்டாக்கி விடவில்லை என்பதை சுகாதார மானியத்தில் மீது பேசும் போது எடுத்துச் சொல்லியிருக்கிறேன். அவற்றை விட்டு விட்டுப் பொறுப்புக்கு மாறான முறையில் நிதி அமைச்சர் அவர்கள் பேசிக் கொண்டே போனார்கள் என்றால் எந்த எந்த வகையில் திராவிட முன்னேற்றக் கழகத்தினர் வந்ததனால் நிர்வாகம் பாதிக்கப்பட்டது என்பதைப் புள்ளி விவரங்களுடன் அவர் எடுத்துச் சொல்ல வேண்டும் என்று இந்த இலாகா அமைச்சர் அவர்கள் மூலமாக அவரைக் கேட்டுக்கொள்கிறேன். காங்கிரஸ் ஆட்சி இருந்த காலத்தில் சமர்ப்பிக்கப்பட்ட ஆடிட்டர் ரிப்போர்ட் பிரதிகள் என்னிடம் இருக்கிறது. அப்போது ஏற்பட்ட ஊழல்கள், அப்போது பலரைக் குறைந்த வரி கட்டும்படி விட்டு வைத்திருந்த தகாத சலுகை, நகரசபையில் நிர்வாகம் பல வகையிலும் சீரழிந்த நிலை, ஆகியவைப்பற்றி ஏன் இப்படி ஏற்படுகிறது என்று இந்த அரசாங்கம் அவர்களைக் கேட்கவில்லை. அவர்களுடைய நிர்வாகத்தில் கீழ் சென்று ஆண்டு ஏறக்குறைய 20 லட்சம் ரூபாய் வரவு செலவு துண்டு விழும்படி செய்திருக்கிறார்கள். திராவிட முன்னேற்றக் கழகத்தினர் புதிதாக பதவியேற்றவுடன் வருமானத்தில் துண்டு விழாதவாறு சரிக்கட்டக்கூடிய அளவுக்கு வருமானத்தைப் பெருக்கும் வகையில் இதுவரையிலும் வசூல் செய்யாமலேயேவிட்டு வைக்கப்பட்டிருந்த பழம் பாக்கிகளை வசூல் செய்ய தீவிர நடவடிக்கை எடுத்துக்கொண்டார்கள். நான் அதற்காகப் பெருமைப்பட்டுக்கொள்ள விரும்பவில்லை. ஆனால், சென்னை அரசாங்கம் நகர சபைக்குச் செய்ய வேண்டிய கடமையைச் செய்திருக்கிறார்களா என்று கேட்க விரும்புகிறேன். இது வரையில் சென்னை நகர சபைக்குச் செய்ய வேண்டிய கடமைகளைக் கூடச் செய்யாமல் தகாத முறையில் இந்த அரசாங்கத்தார் அந்த நகர

சபையைப் பற்றிப் பேசுவது நல்லதல்ல. இந்த ஆண்டில் ஆளும் கட்சியைச் சார்ந்த ஒரு அம்மையார் அவர்கள் பேசிய பேச்சையாவது கவனித்து இருப்பார்கள் என்று எண்ணுகிறேன். நகர சபையில் நிர்வாகம் மாற்றுக் கட்சியில் கையில் போய்விட்டதால் அதன் பொதுச் சுகாதாரம் எப்படிப் பாதிக்கப்பட்டால் என்ன, அவர்களைச் சுட்டிக் காட்டிக் கண்டித்து நாம் பேசலாம் என்கிற மனோபாவம் அமைச்சருக்கு இருக்குமானால் அது மிக மிகத் தவறாகும். இவ்வாண்டு வேண்டுமென்றால் திராவிட முன்னேற்ற கழகம் அங்கே நிர்வாகப் பொறுப்பை ஏற்றுக்கொண்டிருக்கலாம். இது வரையில் அங்கே நடந்து வந்த ஆட்சி காங்கிரஸ்காரர்களுடையது தான். காங்கிரஸ் ஆட்சியின் கீழ் அந்த நிர்வாகம் இருந்த காலத்திலேயே, காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த திருமதி அனந்தநாயகி அம்மையார் அவர்கள் இந்த மன்றத்தில் 1959-ம் ஆண்டு மார்ச் மாதம் 25-ம் தேதி பேசிய பேச்சை உங்கள் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன்.

" சென்னை நகரத்தை எடுத்துக்கொண்டால் இந்த ஆண்டு போட்டிருக்கக் கூடியது ஒரு பற்றாக் குறை பட்ஜெட். போதாத நிலை இருந்தும் இப்போது கொடுக்க வேண்டிய தொகையைக் கருணை காட்டிக் கொடுக்காவிட்டால், நகர சபையின் கதி என்ன ஆகும் என்று சிந்திக்க வேண்டும்.................................அந்நியர்களைச் சென்னை நகர வீதிகளில் அழைத்துக் கொண்டு போகிற போது, போகிற கார், வீதியிலுள்ள குண்டு குழிகளில் விழுந்து, உள்ளே இருப்பவர்களைத் தூக்கிப் போட்டுக்கொண்டு போகுமானால்:—ரோடுகள் மிகவும் மோசமாக இருக்கிறதே என்று வெளியே சொல்லாவிட்டாலும் கூட நினைத்துக்கொண்டு போவர். சென்னை நகரத்துக்கு இன்னொரு சாபம். இங்கே ஓடுகிற பஸ்களை அரசாங்கம் நடத்துகிறது. இப்படி மோட்டார் வெகிக்கிள்ஸ் டாக்ஸேஷனில் எங்களுக்குக் கிடைக்க வேண்டியது 67 இலட்சம். ஆனால் கிடைப்பது 5 இலட்ச ரூபாய். அவர்கள் கொடுக்கக்கூடிய பணத்தைக் கொண்டு நகரிலுள்ள எல்லாச் சாலைகளையும் எப்படிப் பராமரிக்க முடியும்...............அப்படி பராமரிக்க முடியவில்லை என்றால் கெட்ட பெயர் வாங்கிக் கொள்ளட்டும். வாங்குவது நகர சபையில்தானே, நமக்கு என்ன என்ற முறையில் இருக்கிறார்கள். இதைப் பற்றிப் பல ஆண்டுகளாக நகராட்சி மன்ற அங்கத்தினர்கள் எடுத்து சொல்லியும், அங்கத்தினர்கள் தூதுக் குழு அமைத்து அமைச்சரைக் கண்டு அதிகமாக ஒதுக்குங்கள் என்று கேட்ட போதிலும், அதைப் பற்றி காதிலேயே வாங்கிக் கொள்ளாமல், எதிர்க்கட்சித் தலைவர் சொன்னது போல, மாற்றாந்தாய் குணத்தை ஏன் எங்களுக்குக் காட்டுகிறீர்கள் என்று நான் கேட்கிறேன்."

இப்படி அரசாங்கம் தங்கள் கடமையைச் செய்யாது இருக்கக் கூடிய நிலைமையைச் சுட்டிக் காட்டி சென்ற ஆண்டே காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த உறுப்பினரே பேசியிருக்கிறபோது நமது நிதி அமைச்சர் அவர்கள்—மிகவும் திறமைசாலியானவர் ; இன்றையதினம் பொறுப்பற்ற முறையில் பேசிக்கொண்டு செல்கிறார்கள் என்றால் அது மிகவும் வருந்தத்தக்கதாகும். முதல் அமைச்சர் திரு. காமராஜர் அவர்கள் கண்ணியமான முறையில் தெரிவித்திருக்கிறார். "நகரசபையின் நிர்வாகத்தில் உள்ள நெருக்கடியான நிலைமை எனக்குத் தெரியும். நகரத்தைச் செம்மையாக வைத்துக் கொள்வதற்கு உங்களுக்கு உதவி வேண்டுமென்றால் எங்களைக் கேளுங்கள் நாங்கள் எங்கே தேடிப் பெற்றாவது கடன் உதவி அளிக்கிறோம்," என்று பெருமைப்படத் தக்க முறையில் சொல்லியிருக்கிறார். முதல் அமைச்சர் அவர்களுடைய கருத்தையாவது மற்ற மந்திரிகள் பிரதிபலிக்க வேண்டாமா இனிமேலாவது பொறுப்பற்ற முறையில் பேசாது எந்த அளவுக்கு பொறுப் புணர்ச்சியோடு முதல் அமைச்சர் அவர்கள் பேசியிருக்கின்றாரோ அந்த அளவுக்காவது அவரை முதல்வராகக் கொண்ட மற்றவர்களும் நடந்து கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அமைச்சர் திரு. ராமையா அவர்கள் கூட கீரமங்கலம் என்னும் கிராமத்தில் அவருக்கு வரவேற்பு அளித்தபோது சற்று கடுமையாகவே பேசியதாகப் பத்திரிகையில் வந்திருந்தது. அவருக்கு அத்தகைய கோபம்

22nd April 1960] [Sri K. Anbazhagan]

வந்திருக்கக் கூடாது. உள்ளாட்சி மன்றங்களிடத்தில் அனாதைப் பிள்ளைகளிடத்தில் பரிவு காட்டுவது போலக் கருணை காட்டவேண்டும். ஆனால் அமைச்சர் அவர்கள் மாறாகக் கருதுகிறார்கள், " நகராட்சி மன்றங்கள் வரவேற்பு அளிப்பது போல அவர்களுடைய குறைபாடுகளை எல்லாம் சொல்லுகிறார்களே, வரவேற்பு என்ற பெயரால் வேண்டுகோள் அல்லவா விடுத்துத் தொல்லையளிக்கிறார்கள் " என்று அவர் தம்முடைய தகுதியை மறந்துவிட்டார் என்றே வருத்தப்படுகிறேன். இதற்காக அவர் மக்களிடத்தில் கடுமையானமுறையில் கோபத்தைக் காட்டுவதில் அர்த்தமில்லை. அப்படி உள்ளாட்சி மன்ற உறுப்பினர்களை அவர் கண்டிப்பதைவிட தம்முடைய கடமை என்ன, பொறுப்பு என்ன என்பதை உணர்ந்து நடந்துகொண்டார்கள் என்றால் அது எல்லாவகையிலும் வரவேற்கத் தக்கது.

(Deputy Speaker in the Chair.)

இறுதியாக நான் தெரிவிக்க விரும்புவது இன்றையதினம் சென்னை நகரத்தில் பற்பல நெடுஞ்சாலைகளும் ரோடுகளும் சரியானமுறையில் பராமரிக்கப்படவேண்டுமென்றால் சர்க்கார் அவர்களுக்கு உதவி செய்தாகவேண்டும். பஸ்களை இவர்கள் தேசீயமாக்கிய பின்னர் சர்க்காருக்குச் சொந்தமான பஸ் போக்குவரத்தினால் தான் ரோடுகள் அதிகமாகச் சீரழிகின்றன. மோட்டார் வாகன வரி விதிப்புச் சட்டத்தைக் கொண்டு வந்த காலத்தில் முப்பது ஆண்டுகட்கு முன்னர் சர்க்கார் நகரசபைக்கு எவ்வளவு நஷ்டஈடு கொடுக்க முன்வந்தார்களோ அதே தொகையைத்தான் இப்போதும் கொடுத்துக் கொண்டிருப்போம் என்றால் நகரசபையின் ரோடுகள் சரியான முறையில், நிச்சயம் பராமரிக்க முடியாது போகும். அதைக்கொண்டு எந்த விசேமான சீர்திருத்தத்தையும் எதிர்பார்க்க முடியாது என்று தெரிவித்துக்கொள்கிறேன். அப்போது, 1931-ல் நகரசபையின் சுங்கத்தை மேற்கொண்ட போது அச் சட்டத்தின் மூலம் சர்க்காருக்கு ஒரு லட்சத்து அறுபத்துநாலாயிரம் ரூபாய் வசூல் ஆயிற்று. அப்போது சென்னை நகரசபைக்கு ஆண்டு தோறும் அதே தொகையை தருவதற்கு ஒப்புக்கொண்டார்கள். இன்றையதினம் முப்பது ஆண்டு காலமாகிறது. அக்காலத்தில் மோட்டார் வாகனவரி மூலம் மாநிலம் முழுவதற்கும் 66 லட்சம் தான் கிடைத்தது. அதிலிருந்து சென்னை நகருக்கு ஆண்டுக்கு 2 லட்சம் தான் கொடுத்தனர். இப்பொழுதோ அந்த வரி வகையில் சென்னை நகரில் மட்டும் 75, 80 லட்சம் ரூபாய் கிடைக்கிறது. ஆனால் நகரத்துக்குத்தரப்படும் தொகையோ முறைப்படி உயர்த்தப்படவில்லை. அதற்கு அப்பால் அந்தத் தொகையை 1955-ல் இருந்து தனி உதவியாக 5 லட்சம் உயர்த்தினார்களே தவிர, வரி எந்த அளவுக்கு உயர்ந்து சர்க்காருக்கு வருமானம் வருகிறதோ அந்த அளவுக்கு ஏற்ப உயர்த்தித் தரவில்லை. இன்றையதினம் நகரசபை மட்டும் ரோடுகளின் பராமரிப்புக்காக ஆண்டுக்கு 50 லட்சம் ரூபாய் செலவு செய்து வருகிறார்கள். அவர்களுடைய மொத்த வருமானமே 3 கோடி. மொத்த வருமானம் 3 கோடி என்றால் அதில் 6-ல் ஒரு பங்கு இன்றையதினம் ரோடுகளின் பராமரிப்புக்காக நகரசபையினால் செலவு செய்யப்படுகிறது. அப்படி சென்னை அரசாங்கம் செலவழிக்கிறதா, அரசாங்கம் செலவழிக்க முன்வருமா என்று பார்க்கவேண்டும். நகரசபை செலவழிக்கிறது. அதுமாத்திரம் அல்ல. சென்னை நகரசபைக்குச் சொந்தமான வாகனங்களுக்காக அவர்கள் சென்னை சர்க்காருக்கு இந்தச் சட்டத்தின்கீழ் இரண்டு லட்சம் ரூபாய் வரி கட்டுகிறார்கள். இதைக்கூட சர்க்கார் தள்ளிக்கொடுக்க முன்வரவில்லை. அதேசமயம் சென்னை நகரத்திலேயே மோட்டார் வாகன வரிவிதிப்புச் சட்டம் மூலம் 80 லட்சம் ரூபாயும், மோட்டார்-எண்ணெய் வரி மூலம் 192 இலட்ச ரூபாயும் ஆக இப்படி சர்க்காருக்கு 270 இலட்சம் ரூபாய் வசூலாகிறது வரியாக சென்னையில். ஆனால் அரசாங்கம் மிகத் தாராளமாக 5 இலட்சம் ரூபாய் நகரசபைக்குக் கொடுக்க முன் வருகிறது என்றால் ரோடுகள் சரியான முறையில் பராமரிக்கப்படவில்லை என்று திரா `ட முன்னேற்றக் கழகத்தாரைக் குற்றம் சொல்லி என்ன பயன் ? ஐந்து இலட்சம் ரூபாய் கொடுத்தார்கள் என்றால் யார் தான் எப்படிச் செயலாற்ற முடியும் ?

அகவே அவர்கள் கேட்டிருக்கிறார்கள், மோட்டார் வாகன வரியினால் வசூலாகக் கூடிய பணத்தில் பாதி தாருங்கள் மோட்டார்-எண்ணெ வரியில் கால் பங்கு தாருங்கள் சென்னை நகரசபை ரோடுகளைப் பராமரிப்பதற்கு என்று திராவிட முன்னேற்றக் கழகத்தினர் நிர்வாகத்திற்கு வந்தவுடன் தான் இப்படிக் கேட்டார்களா என்றால் இல்லை. ஏற்கனவே இருந்து காங்கிரஸ்காரர்களும் கேட்டிருக்கிறார்கள். இன்றையதினம் இருக்கிற காங்கிரஸ்காரர்களும் கூடக் கேட்கிறார்கள். மோட்டார் வாகன வரியில் இருந்தும், எண்ணெ வரியில் இருந்தும் வசூலாகக் கூடிய தொகையில் ஒரு பகுதி தாருங்கள் என்று. ஆனால் அப்படிக் கொடுப்பதற்கு இந்தச் சர்க்காருக்கு மனம் இல்லை. ரோடுகளுடைய சீரழிவிற்குக் காரணமே சர்க்கார் பஸ்கள்தான். அதற்காக பஸ்களைத் தேசிய மாக்கியதை நான் குற்றம் சாட்டவில்லை. தினந்தோறும் இந்த பஸ்களினால் சர்க்காருக்கு லாபம் வருகிறது. அதில் ஒரு பகுதியைக் கூட கொடுக்கலாம் இன்றைய தினம் அப்படி எதுவும் உதவி செய்யாத காரணமாக ரோடுகள் மோசமாக இருக்கின்றன என்றால் அதன்காரணமாக சர்க்கார் பஸ்களுக்குக் கூட அதிக சேதம் நாளடைவில் ஏற்பட்டுவரும். டையர் தேயும், கிழியும், வண்டியில் ஒட்டை விழும். இப்படி வருகிற நஷ்டத்தையாவது தடுக்கலாம், பஸ் வருமானத்தில் இருந்து பணம் ஒதுக்கித்தருவது மூலம் இப்படிப் பல இனங்களில் இருந்து சர்க்காருக்குக் கிடைக்கிற வருமானத்தில் நகரசபைக்குப் பணம் கொடுத்து உதவி செய்யத் தான் சர்க்கார் மறுக்கிறது என்ற நிலை எப்படியேன் அவர்களாக தங்கள் வருமானத்தைப் பெருக்கிக் கொள்ள டெர்மினல் டாக்ஸ் போடுவதாக இருந்தாலும், Octroi duty ஏற்றுமதி இறக்குமதி சாமான் மீது வரி விதிக்கவிரும்பினாலும் அதற்காவது அனுமதி தாருங்கள் என்று கேட்கிறேன். நாகபுரியில் அந்த அனுமதி இருக்கிறது. டெல்லியில் இருக்கிறது. ஆண்டு ஒன்றுக்கு எழுபது இலட்சம், எண்பது இலட்சம், கோடி என்று வருமானம் இருக்கிறது. அந்த முறைப்படி இங்கும் அதை ஏன் விதிக்கக் கூடாது என்று கேட்கிறேன். சென்னை நமது ராஜ்யத்தின் தலைநகரம். அமைச்சர்கள் இருக்கக் கூடிய நகரம். சட்டமன்றம் கூடுகிற நகரம். அந்த நகரத்தின் நலனுக்காக அதன் நகரசபையின் வருமானத்தைப் பெருக்காமல் பெருக்குவதற்கு வழி செய்யாமல் வீண் குற்றத்தைக் கூறவேண்டாம் என்று கேட்டுக் கொண்டு இந்த மானியத்தின் மீது வந்த வெட்டுத் தீர்மானத்தை ஆதரித்து என் உரையை முடிக்கிறேன்.

THE HON. SRI P. KAKKAN: திரு. அன்பழகன் அவர்கள் பேசும் போது நான் குறுக்கிட விரும்பவில்லை. இருந்தாலும் நான் இந்த மன்றத்தில் சொல்லிக் கொள்ள விரும்புவது பல வருடங்களுக்கு முன்பு இந்த சென்னை நகராண்மைக் கழகத்தில் காங்கிரஸ்காரர்களும் இருந்தார்கள்.

SRI A. V. P. ASAITHAMBI: ஆன் எ பாயிண்ட் ஆப் ஆர்டர். நடைபெறுகிற இந்த மான்யத்தின் பேரில் சம்பந்தப்பட்ட இலாகா மந்திரியவர்கள் பதில் சொல்வார்கள். ஆனால் அமைச்சர் கக்கன் அவர்கள் இப்பொழுது குறுக்கிட்டுச் சொல்கிறார்கள். அவரைப் பற்றி இதில் ஏதாவது இருக்கிறதா ?

DEPUTY SPEAKER: The Hon. Minister has got the right to reply. There is joint responsibilty. Every Minister has got the right to reply.

THE HON. SRI P. KAKKAN: மதிப்பிற்குரிய எனது சக அமைச்சர், நிதியமைச்சர் அவர்களைப்பற்றி சொல்லும்போது நான் பதில் சொல்ல கடமைப் பட்டிருக்கிறேன். நாற்றம் எடுக்கிறது. கொசு உபத்திரவம் பொறுக்க முடியவில்லை என்று நிதியமைச்சர் அவர்கள் பொறுப்பற்ற தன்மையில் கூறியுள்ளார்கள் என்று சொன்னார்கள். இப்படி பொறுப்பற்ற தன்மையில் மதிப்பிற்குரிய அன்பழகனைப் போன்றவர்கள் சொல்வது சரியல்ல, என்று பணிவோடு தெரிவித்துக் கொள்கிறேன். நிதியமைச்சர் அவர்களின் பொறுப்புள்ள தன்மை, அவர்களின் திறமை எல்லாம் இந்த

22nd April 1960] [Sri P. Kakkan]

மாகாணத்தில் உள்ளவர்களுக்கு நன்கு தெரியும். அவர்கள் உள்ளதை உள்ளவாறு சொல்லியிருக்கிறார்கள். இதற்கு முன்பு சென்னை நகரத்தில் சீப் மினிஸ்ட்டர் பெருக்குமாறு எடுத்து, மேயர் பெருக்குமாறு எடுத்து கூட்டிய காட்சியை யாரும் பார்த்ததே கிடையாது. இதுவே ஒரு எடுத்துக் காட்டாகும் என்பதை அன்பழகன் அவர்களுக்கு தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI K. ANBAZHAGAN : Sir on a point of personal explanation நான், அமைச்சர் அவர்கள் சொன்ன கருத்தை, பத்திரிகைகளில் வந்ததைப் படித்து விட்டுத்தான் சொன்னேன். அப்படி பத்திரிகைகளில் வந்திருந்ததை அமைச்சர் அவர்கள் மறுத்திருந்தால் அதைக் குறிப்பிட்டிருக்க மாட்டேன். சட்டமன்றத்தில் அதுபற்றி அமைச்சர் அவர்கள் பேசியதை விட சட்டமன்றத்தின் வெளியே அதை விட கடுமையாக பேசியிருக்கிறார்கள். அப்படி அமைச்சர் அவர்கள் பேசியிருப்பதால் அந்தக் குற்றச் சாட்டு எங்கே சாரும் ? அமைச்சர் அவர்கள் மற்ற காரியங்களில் பொறுப் பற்ற தன்மையில் இருக்கிறார்கள் என்று நான் சொல்லவில்லை, என்பதை நான் இந்த அவையில் தெரிவித்துக் கொள்கிறேன்.

* SRIMATHI C. KOLANTHAI AMMAL : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இன்று இந்த மான்யக் கோரிக்கையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் பேச நான் முற்படுகிறேன். நமது கிராம ரோடுகள், நகர ரோடுகள் நாட்டின் போக்குவரத்திற்கு மிக இன்றியமையாதவை என்பதை நாம் நன்கு உணர்ந்து அதற்கு ஏராளமான பணம் செலவழிக்கிறோம். இருந்தாலும் கூட இன்று மக்களின் போக்குவரத்து அதிகமாகப் போயிருக்கிற காரணத்தினாலும் தொழிலாளர்கள் தொழிற்சாலைகளுக்கு காலா காலங்களில் சென்று வருவதற்கு முடியாத நிலை இருக்கும் காரணத்தினாலும், எங்கள் கோவை நகரத்தைப் பொறுத்தவரையில் அதைச் சுற்றியிருக்கும் கிராமப் புறங்களிலிருந்து வரக் கூடிய மில் தொழிலாளிகள், விவசாயத் தொழிலாளர்கள், ஷிப்ட் முறை வைத்துக் கொண்டு தொழில்சாலைகளில் வேலை செய்து வருவதால் கிராமங்களில் குடியிருக்கும் மில் தொழிலாளர்கள், விவசாயத் தொழிலாளர்கள் இரண்டு பேர்களும் இரவு நேரங்களில் தொழிற்சாலைகளிலிருந்து வரும்போது அவர்களுக்கு நல்லவிதமான ரோடு வசதி இருந்தால்தான் மழைக் காலங்களிலும் மற்ற காலங்களிலும் அவர்கள் சாதாரணமாக வந்து செல்ல முடியும். ஆனால் இந்த ரோடு வசதிக்கு போதுமான பணம் ஜில்லா போர்ட்களிலிருந்தும், பஞ்சாயத்துகளில் இருந்தும் செலவழிக்கப் படவில்லை. கடந்த சில மாதங்களாக ஜில்லா போர்ட்களிலிருந்து இதற்காக பணம் கேட்டால் அதன் நிர்வாகத்திற்கே போதுமான பணம் இல்லை என்று சொல்லி விடுகிறார்கள். ஆனால் ரோடு வசதிக்காக அதிகப்படியான தொகை ஒதுக்கப் பட்டால்தான் சுற்றிலுள்ள கிராமங்களிலுள்ள தொழிலாளர்கள் அதுவும் மில் தொழிலாளர்கள், மூன்று ஷிப்ட்களில் வேலை செய்பவர்கள் 12 மணி, 1 மணி என்று வீட்டிற்கு செல்லும்போது, சௌகரியமாகச் செல்ல முடியும். ஆகவே, நகரங்களோடு இணைந்திருக்கும் கிராமங்களுக்கு நல்ல ரோடு வசதிகள் செய்து கொடுப்பதற்கு போதுமான பணம் செலவழிக்கப் பட வேண்டுமென்று நான் இங்கு வற்புறுத்திச் சொல்லிக் கொள்ளவிரும்புகிறேன். பொது சுகாதாரம் பற்றிச் சொல்லும்போது கோவையில், அது ஒரு பெரிய வியாபார ஸ்தலமாக இருப்பதால் ஏராளமான மக்கள் அங்கு வந்து போவதால் அங்கு ஏராளமாக குப்பைகூளங்கள் சேருகிறது. அதோடு சேரிகளில், புதுப் புது ஊர்கள் சிருஷ்டிக்கப் படுகிறது. ஒரு 50 பேர்கள் 60 பேர்கள் புறம்போக்கு நிலங்களில் வீடுகள் கட்டிக்கொண்டு அதற்கு ஒரு புதுப் பெயரை இரண்டு மூன்று நாட்களில் வைத்து பின்னர் சர்க்காரிலிருந்து அப்புறப்படுத்தப்படும் ஒரு நிலை ஏற்படுகிறது. இந்த சேரி புனரமைப்பிற்காக ஒதுக்கப் பட்டிருக்கும் பணம் அதிகமாக இருக்க வேண்டும். சென்னை நகர் என்ற பெயரில்தான் அதிக தொகை ஒதுக்குகிறார்கள். அந்த அளவிற்கு முனிஸிப்பாலிட்டிகளில், அதிலும் சிறப்பாக கோவை முனிசிப்பாலிட்டிக்கு அதிகப்படியான தொகை ஒதுக்கப் பட வேண்டும். காரணம், அங்கு ஏராளமான மில்கள் இருக்கின்றன. அவைகளில் வேலை செய்யும் தாழ்த்தப்பட்ட நிலையிலுள்ள மக்களுக்கு குடியிருக்கவீட்டு வசதியில்லை என்ற காரணத்தால் சேரி புனரமைப்புத் திட்டத்திற்காக அதிகப்படியான தொகை செலவழிக்கப் படவேண்டுமென்று

கேட்டுக் கொள்கிறேன். பஞ்சாயத்து ஆட்சிமுறையில் தலைக்கு 40 நயா பைசா என்று கொடுப்பதினால் போக்குவரத்து சாலைகள் அமைப்பதற்கு அவை பயன்படாது என்று எதிர்கட்சியினர் குறிப்பிட்டார்கள். எங்கு தொழில் வளம் நிரம்பியிருக்கிறதோ, எங்கு தொழிற்சாலைகள் இருக் கிறதோ அங்குதான் மக்கள் குடியேறுவது இயற்கை. இயற்கைவளம் இல்லாத இடத்திலே, தொழிற்சாலையில்லாத இடத்திலே மக்கள் விரும்பி குடியேறுவதை நாம் பார்க்க முடியாது. ஆகவே, இயற்கை வளம் நிரம் பியிருக்கும் இடங்களுக்கு, பிற்போக்காக இருக்கும் ராமனுதபுரம் வட்டாரம் போன்ற பகுதிகளுக்கு செலவழிக்கும் அளவிற்கு மற்ற ஊர்களுக்கும் செலவழித்தால் அது முன்னேற்றத்திற்கு அறிகுறியாக இருக்காது. முற்பட்ட இடங்களில், அதாவது மக்கள் அதிகமாக குடியேறும் இடங்களில் அதிகச்செலவு செய்வது என்பது இயற்கையாக அமைந்து விட்ட ஒன்ருகும். ஆகவே, இயற்கை சூழ்நிலையை மாற்றி அதிக மக்கள் குடியிருப்பதால் முன்னேற்றம் ஏற்படுகிறது என்ற எண்ணத்தை வற்புறுத்தக் கூடாது. அடுத்தபடியாக, சென்னையில் கொசு உபத்திரவம் இருக்கிறது என்பதைப்பற்றி குறிப்பிடப் பட்டது. திராவிட முன்னேற்றக் கழகத்தினர் ஆட்சி புரிகிற இந்தக் காலத்தில் அல்ல அதற்கு முன்பே பத்து வருடங்களாகவே அது வளர்ந்திருக்கிறது என்று குறிப்பிட்டார்கள். ஆனல் இப்பொழுது புதிய முறைகளை கையாண்டு, நல்ல மருந்துகளை " ஸ்பிரே " செய்து ஒரு நாளிலேயே கொசுக்களை அகற்றமுடியும். அதை யார் செய்தாலும் சரி, பொது சுகாதாரத்தை பாதுகாப்பது மக்கள் பிரதிநிதிகளின் கடமையாகும். காங் கிரஸ்காரர்கள்தான் செய்ய வேண்டும். காங்கிரஸ்காரர்கள் செய்ய தவறி யிருக்கிருர்கள் என்று வற்புறுத்துவது போல் அவர்கள் சொன்ஞர்கள். அதை நீங்கள் ஏன் செய்திருக்கக் கூடாது என்றுதான் நான் கேட்கிறேன். அதைத் தீர்த்து வைப்பது உங்கள் கடமை இல்லையா ? நகரத்திலுள்ள நாற்றம், கொசுக்கடி இவைகள் முன்னை விட இப்பொழுது அதிகமாகி யிருக்கிறது என்பதை எங்கள் மூன்று வருட அனுபவத்தில் சொல்ல முடியும். ஆகவே, கொசுவை மேலும் வளர்ப்பதை சென்னை நகரசபை நிறுத்தியிருக்க வேண்டும். பின், ஒரு கோரிக்கை இந்த சீரமைப்பிற்கு பணம் போதவில்லை என்பதுதான் திட்டங்களுக்காக வேலை செய்ய மக்களும முன்வருகிருர்கள். சட்டசபை அங்கத்தினர்களும், ஜில்லா போர்ட் மெம் பர்களும் அவரவர்கள் பகுதியைச் சீர்படுத்த அதிகப் பணம் கேட்கிருர்கள். ஆனல் பணப் பற்றுக்குறையிருக்கிறது. ஆகவே, அதற்காக அதிகப் படியான தொகை ஒதுக்கப் படவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பாரத நாட்டை பார்த்தால் நமது சென்னையில் 53 சதவிதம் அளவு முன்னேறியிருக்கிறோம். அதற்காக டிபார்ட்மென்ட் அதிகாரிகள் நல்ல முறையில் தீவிரமாக வேலை செய்து வருகிருர்கள். அவர்களுக்கு நமது பாராட்டுதலை தெரிவிப்பதோடுகூட இன்னும் அதிகத் தொகை செல வழிக்கப் படவேண்டுமென்று வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறேன். கடை சியாக, எங்கள் கோவை நகரத்திற்கு நல்ல தண்ணீர் திட்டம் கண்டிப்பாக கொண்டு வரப்படவேண்டும். சீர்வாணி ஆற்றுத் திட்டத்தை எங்களுக்கு செய்து தந்தால்தான் கோவை நகரத்தைப் பொறுத்த மட்டில் இந்த மாகாணத்தில் அது நல்லவிதத்தில் இருக்கமுடியும். ஆகவே, இந்த சிறுவாணி ஆற்றுத் திட்டத்தை உடனடியாக செய்ய வேண்டிய ஏற் பாடுகள் செய்ய வேண்டும். தொழில் தலைநகரில் இன்று குடிதண்ணீர் கஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. அதனல் பொது சுகாதாரம் பாதிக்கப்பட்டிருக் கிறது. ஆகவே, கோவை நகரத்தைப் பொறுத்த வரையில் இந்த இரண் டையும் சீக்கிரம் செய்து தர யோசனை செய்து அதற்கு வேண்டிய அளவு பணம் ஒதுக்கவேண்டுமென்றும் கேட்டுக் கொண்டு எனது உரையை முடித்துக் கொள்கிறேன்.

12-30 p.m. *SRI P. KOLANDA GOUNDER : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மான்யத்தை ஆதரித்து, என் பகுதியிலுள்ள சில குறைகளை எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். குறிப்பாக என் பகுதியாக இருக்கின்ற சேர்வராயன்மலை பகுதியிலுள்ள குறைகளை முக்கியமாக எடுத்து சொல்ல விரும்புகிறேன். இதில் முக்கியமாக அயோத்தி பட்டணத்திலிருந்து மலை அடிவாரத்திற்கு ஒரு பாதை போகின்றது. அந்த பாதையில் பூமனூர்,

22nd April 1960] [Sri P. Kolanda Gounder]

தாத்தானூர், கொட்டாய முதலிய ஊர்கள் இருக்கின்றன. அந்த இடத்தில் வசிக்கின்ற மலை ஜாதியினர் காலனி பத்து வீடுகள் கட்டியிருக்கிறார். அதை திறப்பதற்காக என்னை ப்ரோகிராமில் போட்டு, கூப்பிட்டிருந்தார்கள். நான் போகும் போது அயோத்திப்பட்டினத்திலிருந்து ஏழு மைல்கள் போகிறவரை நல்ல ரோடு வசதியாகத்தான் இருக்கிறது. அந்த ஏழு மைலும் பயிர்காடு வழியாகத்தான் கால்நடையாக போனேன். ஷை ஒரு மைலுக்கும் ரோடு போட்டு கொடுக்கவேண்டும். இந்த காலனியிலுள்ள மக்களுக்கு ஒன்றும் கிடையாது. அவர்களுக்கு எந்தவிதமான ஆஸ்பத்திரி வசதியும் கிடையாது. ஒரு மாட்டு வண்டிகூட போவதற்கு எந்தவிதமான வசதியும் இல்லை. அவர்கள் இப்போது தங்களுக்கு கிடைக்கின்ற கடலைக் காய், கிழங்கு, வெங்காயம், மிளகாய், கொத்தமல்லி இவைகளை எல்லாம் சேலம் மண்டிக்கு தலைச்சுமையில்தான் கொண்டு வருகிறார்கள். இதை யெல்லாம் சேலத்திற்கு மாட்டு வண்டியில் கொண்டு வருவதற்கு வசதி யிருந்தால் சேலம் மண்டியில் கொண்டு வந்து இந்த சாமான்களை எல்லாம் கொடுத்துவிட்டு, சேலத்திலிருந்து அவர்களுக்கு வேண்டிய உரம் முதலி யவற்றை வாங்கிக்கொண்டு போவதற்கும் வசதியாக இருக்கும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். பூமனூர் என்கிற கிராமத்திற்கும் இந்த பாதை வழியாக போவதற்கு வசதியேற்படும். இந்த பாதையை போட்டுக் கொடுத்தால் அது மட்டுமல்ல, சேர்வராயன் மலை அடிவாரத்திலிருந்து வெளியே மற்ற கிராமங்களுக்கு வரவேண்டுமென்றால் பலவிதமான கஷ்டங் கள் இருக்கின்றன. தற்செயலாக அங்கு மழை பெய்து விட்டால், மூன்று நாளைக்கு அந்த மலையடிவாரத்திலிருக்கிறவர்கள் சேலம் டவுனுக்கே வர முடியாது. இந்த நாட்களில் எல்லாம் அங்குள்ளவர்கள் அந்த மலை அடிவாரத்திலேயே இருக்கிறார்கள். ஆகவே சேலத்திற்கு போகின்ற ரோட் டுக்கும் இந்த இடத்திற்கும் மூன்று பர்லாங் தூரந்தான் இருக்கிறது. இந்த இடத்தில் ஒரு சிறிய பாலத்தையும் போட்டு, ஒரு சிறிய பாலமும் ரோட்டையும் போட்டு கொடுத்துவிட்டால் அங்குள்ள மக்கள் சேலத்திற்கு அதிகமாக போய் வருவதற்கு வசதியாக இருக்கும் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன். மேலும் அந்த மாலை அடிவாரத்திலுள்ள மூன்று மைல் தூரத்திற்குள் இருக்கும் பெரியகவுண்டாபுரம், சிறியகவுண்டாபுரம் நொச்சிப் பட்டி, வரகம்பாலி, சல்லூத்துப்பட்டி, மஞ்சப்பாளி, நடுப்பட்டி இந்த இடங்களுக்கு எல்லாம் ஜனங்கள் அயோத்திப்பட்டணத்திலுள்ள சந்தைக்குத் தான் வரவேண்டும். இப்போது இங்குள்ள ஜனங்கள் தங்களுடைய நெல், கம்பு, சோளம், வெங்காயம், கொத்தமல்லி இவைகளை எல்லாம் தலைச்சுமை யாகத்தான் கொண்டு வந்து கொண்டிருக்கிறார்கள். ஆகவே இந்தக் கிராமத்திலுள்ள மக்கள் எல்லாம் இந்த வியாழச் சந்தைக்கு வரவேண்டு மென்றால், நொச்சிப்பட்டியிலிருந்து அயோத்திபட்டணத்திற்கு ஒரு ரோடு போடுவதாக இருந்தால் மிகவும் வசதியாக இருக்கும். இதற்கு நடுவில் ஒரு ஏரி. இந்த ரோட்டை ஒரு 12 அடி ரோடாக போட்டுக்கொடுத்தால் அவர்கள் மாட்டு வண்டி மூலமாக தங்கள் சாமான்களை எல்லாம் சந்தைக்கு கொண்டு வருவதற்கு வசதியாக இருக்கும் என்பதை சபாநாயகர் மூலமாக தெரிவித்துக்கொள்கிறேன். இது தவிர சேலத்திலிருந்து 10 மைல் தூரத் திலுள்ள காரிப்பட்டிக்கு ஒரு பஸ் போகின்றது. அதோடு சேலத்திலிருந்து எட்டு மைல் உள்ள ஒரு ரோடு பெரிய கவுண்டன்புரத்திற்கு போகிறது. இந்த ரோடு வழியாக இந்த பஸ் போய்க்கொண்டிருக்கிறது. இந்த ரோட்டில்தான் ஒட்டப்பட்டி, பெரியகவுண்டாபுரம், சிறிய கவுண்டாபுரம் முதலிய இடங்கள் எல்லாம் இருக்கின்றது. இந்த இடத்திலுள்ள ஜனங்கள் எல்லாம் இந்த பஸ்ஸில்தான் வரவேண்டும். இந்த இடங்களில் எல்லாம் சுமார் 500 வீடுகள் இருக்கின்றன. இந்த மக்கள் எல்லாம் அடிக்கடி சேலத்திற்கு வரவேண்டியிருக்கிறது. ஆகவே காரிப்பட்டிக்குப் போய்க் கொண்டிருக்கும் இந்த பஸ்ஸை காலை ஏழு மணிக்கும், மாலை ஏழு மணிக்கும் ஒவ்வொரு ட்ரிப் விட்டால், ஜனங்களுக்கு மிகவும் சௌகரியமாக இருக்கும். அதோடு இந்த இடங்களிலுள்ள ஜனங்கள் எல்லாம் சேலத் திலுள்ள எல்லா நிகழ்ச்சிகளுக்கும், சர்க்காரிலுள்ள விசேஷங்களிலும் கலந்துகொள்வார்கள் என்பதை சபாநாயகர் அவர்கள் மூலமாக தெரிவித்து கொள்கிறேன்.

[Sri P. Kolanda Gounder] [22nd April 1960

அதோடு பனைமரத்துப்பட்டி ஏரி என்ற ஒரு ஏரி 1911-ல் கட்டியிருக்கிறார்கள், இந்த ஏரியை சூரியூர், அத்திப்பட்டி, முத்தானூர், காளியூர் என்கிற நான்கு ஊர்களின் மேல் தான் இந்த ஏரியை எழுப்பியிருக்கிறார்கள். இதிலுள்ள தண்ணீர்தான் இப்போது சேலம் நகரத்திற்கு குடித்தண்ணீருக்கு உபயோகப்படுகிறது. இந்த ஏரியில் இப்போது இருக்கின்ற தண்ணீரைப் பார்த்தால் இந்த ஏரி முழுவதும் இப்போதும் தண்ணீர் இல்லை.

**THE HON. SRI P. KAKKAN :** இதற்காக வேறு மான்யம் வரும்போது பேசிக்கொள்ளலாம் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். இர்ரிகேஷன் மான்யம் தனியாக வரும்.

**DEPUTY SPEAKER :** இது குடித் தண்ணீர் விஷயத்தைப்பற்றியதுதான். அதனால் இதில் பேசுவதில் தவறு ஒன்றுமில்லை என்று நினைக்கிறேன். கனம் அங்கத்தினர் அவர்கள் தொடர்ந்து பேசலாம்.

**SRI P. KOLANDA GOUNDER :** நான் சொல்லுவது சேலத்திற்கு குடித் தண்ணீர் வகைக்காக இப்போது இந்த ஏரி தான் உபயோகப்படுகிறது. இதில் இப்போது தண்ணீர் பிடிப்பாக இருக்கக் கூடிய இடம் காளியூர் என்ற நிலத்தில் மட்டும்தான். மற்ற மூன்று இடத்திலுள்ள நிலங்களிலும் தண்ணீர் பிடிப்பு இல்லை. ஆகவே இந்த இடங்களில் ஏழை ஜனங்களுக்கு உழவடைக்கு விட்டு விட்டால் மிகவும் உபகாரமாய் இருக்கும் என்பதை நமது மந்திரி அவர்களிடம் நமது மினிஸ்டர் அவர்களிடம் மிகவும் வணக்கத்தோடு கேட்டுக்கொள்ளுகிறேன். நீர்ப்பிடிப்பு இல்லாமல் இருக்கும் இந்த மூன்று இடங்களும் இப்போது முனிசிப்பாலிட்டியாகத்தான் இருந்து கொண்டிருக்கிறது. இதை ஏழைகளுக்கு கொடுத்தால் மிகவும் வசதியாக இருக்கும் என்பதை திரும்பவும் சொல்லிக்கொள்கிறேன். மேலும் இந்த பனைமரத்துப்பட்டி ஏரியிலிருந்து ஒரு ரோடு குள்ளப்பநாயக்கனூர் என்று ஒரு சந்தை இருக்கிறது. இந்த சந்தைக்கு வேடப்பட்டி நாவாத்துக்கோம்பை, சாம்பக்கோட்டைப்பட்டி, அடிமலைப்பட்டி, கெடமலை, சம்பூத்துமலை, துமபல்பட்டி, இந்த கிராமத்திலுள்ள மக்கள் எல்லாம் ஒரு ரோடு வழியாகத்தான் வந்து கொண்டிருக்கிறார்கள். இதில் வேடப்பட்டி என்பது ஒரு பஞ்சாயத்தாக இருக்கிறது. இந்த ரோட்டில் ஒரு மாட்டு வண்டி கூட போக முடியாத நிலை இருக்கிறது. மேலும் இந்த கிராமத்திலுள்ள மக்கள் எல்லாம் அடிக்கடி சேலத்திற்கு வந்துபோய்க் கொண்டிருக்கிறார்கள். இவர்களுக்கு மாட்டுவண்டி போகக்கூடிய அளவுக்கு பாதை வசதியிருந்தால் கூட அவர்கள் தங்கள் சாமான்களை சேலத்தில் கொண்டு வந்து கொடுத்துவிட்டு, அவர்களுக்கு வேண்டிய உரத்தை வாங்கிக்கொண்டு போவதற்கு வசதியாக இருக்கும். இது தவிர குரால்நத்தம் என்ற கிராமத்திற்கு செல்லவேண்டுமானால் பட்டா நிலத்திலுள்ள வழியில்தான் போகவேண்டியிருக்கிறது. இந்த பாதையில் தான் சூரியூர், சின்னக்கோணமடுவு, முத்தானூர் போன்ற இடங்களும் இருக்கின்றன சில சமயங்களில் இந்த பாதையில் போவதை தடுத்துவிடுகிறார்கள். ஆகவே இந்த கிராமங்களுக்கு எல்லாம் போவதற்கு வசதியாக குரால் நத்தம் கிராமத்திலிருந்து சூரியூருக்கு ஒரு ரோடு போட்டால் இங்குள்ள ஜனங்கள் எல்லாம் கடலை, மொச்சைகொட்டை, மிளகாய் முதலியவைகளை சேலத்தில் கொண்டு போய் மண்டியில் கொண்டு கொடுப்பதற்கும் அங்கிருந்து தங்களுக்கு வேண்டிய உரம் போன்றவைகளை வாங்கிக்கொண்டு வருவதற்கு சௌகரியமாக இருக்கும் என்பதையும் தாழ்மையாக தெரிவித்துக்கொள்கிறேன். கடைசியாக ஒரு விஷயத்தைக் கூறிக்கொள்கிறேன். நம்முடைய நாட்டில் அரிஜனங்களுக்கு என்னவெல்லாம் வசதி செய்து கொடுக்கிறோமோ அதே போன்று எங்கள் மலை ஜாதியினரும் மலை பகுதியில் இருக்கும் மலையில் வசித்து வருகின்ற ஜாதியினருக்கும் எல்லா வசதிகளையும் செய்துகொடுத்தால், அவர்களுக்கு மிகவும் சௌகரியமாக இருக்கும், அவர்கள் எப்போதும் இந்த சர்க்காரை ஆதரித்துக் கொண்டிருப்பார்கள் என்பதையும் தெரிவித்துக் கொண்டு, கனம் உதவி சபாநாயகர் அவர்களுக்கு வணக்கத்தையும் தெரிவித்துக்கொண்டு என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

22nd April 1960]

SRI N. MARUDACHALAM : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த ஸ்தல ஸ்தாபன மானியத்திற்குக் கொண்டுவரப்பட்டுள்ள வெட்டுப் பிரேரணையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்த ராஜ்யத்தில் 1,000 பஞ்சாயத்து போர்டுகளும் 66 முனிசிபாலிடிகளும் இருக்கின்றன. இந்த 66 முனிசிபாலிடிகளிலும், கிராமங்களிலும் சுகாதாரம் பாதுகாக்கப்பட வேண்டுமானால், சுகாதாரத்தைப் பாதுகாக்கக்கூடிய ஹரிஜன மக்களாகிய முனிசிபல் தொழிலாளர்களின் நலன்கள் முதலில் பாதுகாக்கப்பட வேண்டும். அவர்கள் நலன்கள் பாதுகாக்கப்பட்டால் தான் சுகாதாரமும் பாதுகாக்கப்படுவது சாத்திய மாகும். இன்று பல முனிசிபாலிடிகளில் முனிசிபல் தொழிலாளர்களுக்குச் சொந்த வீடுகள் கிடையாது. அவர்கள் புறம்போக்கு நிலங்களில் வீடுகள் கட்டிக்கொண்டிருக்கிறார்கள். அந்த வீடுகளை உடனடியாகப் பிரிக்கும் படி உத்தரவு வருகிறது. இன்று டகுறிச்சி முனிசிபாலிடியில் வேலை செய்யும் முனிசிபல் தொழிலாளர்கள் புறம்போக்கு நிலங்களில் வீடுகள் கட்டிக்கொண்டு குடியிருக்கிறார்கள். அவர்கள் அந்த வீடுகளை உடனடியாகக் காலி செய்ய வேண்டுமென்று அவர்களுக்கு நோட்டீஸ் கொடுக்கப்பட்டிருக்கிறது. எனவே சேரி ஒழிப்புத் திட்டத்தின் கீழ் அவர்களுக்கென வீடுகள் கட்டி, அந்த வீடுகளில் அவர்கள் குறைந்த வாடகைக்குக் குடியிருக்கச் செய்ய சர்க்கார் ஏற்பாடு செய்ய வேண்டும். மேலும், கோவை முனிசிபாலிடியில் ஆயிரக்கணக்கான முனிசிபல் தொழிலாளர்கள் வேலை செய்கிறார்கள். அவர்கள் கடினமாக உழைத்து குறைவான சம்பளம் வாங்குபவர்கள். அவர்களுக்கு மிக மோசமான சம்பளம் கொடுக்கப்படுகிறது. ஒவ்வொரு தொழிலாளருக்கும் சம்பளம் 18 ரூபாய்க்கு மேல் கிடையாது. அத்துடன் பஞ்சப்படி முதலியவை சேர்ந்து ஒவ்வொரு தொழிலாளருக்கும் மொத்தம் 55 ரூபாய் மாதம் வருகிறது. இன்று விலைவாசிகள் ஏறிவரும்போது, மில் தொழிலாளர்களும் மற்றெல்லா சாதாரணத் தொழிலாளர்களும் அதிகச் சம்பளம் கோருகிறார்கள். இந்த முனிசிபல் தொழிலாளர்களுக்கு எந்த விதமான நன்மையும் செய்யப்படுவதில்லை. முனிசிபல் தொழிலாளர்களுக்கு உடனடியாக அதிகப் படியான சம்பளம் கொடுக்க வேண்டும். ஒவ்வொரு முனிசிபாலிடியிலும் அவர்களுக்கு அதிகமான வேலை கொடுக்கப்படுகிறது. கோவை முனிசிபாலிடியில் சுகாதார வேலைகளை கவனிப்பதற்கு 30, 50 தொழிலாளர்கள் அதிகமாக வேண்டுமென்று தீர்மானம் அனுப்பப்பட்டது. அந்தத் தீர்மானம் நிராகரிக்கப்பட்டிருக்கிறது. நகரம் பெருகப் பெருக இந்த வேலைகளுக்கு அதிகமான ஆட்கள் தேவைப்படுகின்றனர். நகரங்கள் விரிவடைவதற்குத் தகுந்தபடி அதிகமான முனிசிபல் தொழிலாளர்களை நியமிக்க வேண்டும். நகரங்களில் சுகாதாரத்தை நன்றாகப் பாதுகாப்பதன் பொருட்டு முனிசிபல் தொழிலாளர்களை அதிகரிக்க ஏற்பாடு செய்யவேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, இன்று கோவை நகரில் முக்கியமான பிரச்னை, குடி தண்ணீர் பிரச்னை. சாகும் தருவாயில்கூட தண்ணீர் தேவையாயிருக்கிறது. ஸ்ரீ ரத்னசபாபதி முதலியார் காலத்தில் ஆயிரம் பேர்களுக்குத் தேவையான குடி தண்ணீருக்கு சிறுவாணியில் ஏற்பாடு செய்தார்கள். இப்போது அந்த நகரம் விரிவாகி, 3,000 பேர் ஜனத்தொகை கொண்டதாக ஆகியிருக்கிறது. அந்த ஜனத்தொகைக்குப் போதுமான தண்ணீர் சிறுவாணியிலிருந்து கிடைப்பதில்லை. சிறுவாணியிலிருந்து இன்று கிடைக்கும் தண்ணீர் 25 லட்சம் காலன்கள்தான். இதை 3,000 ஜனங்களுக்குப் பகிர்ந்து கொடுக்க முடியாது. எனவே இப்போது அங்குள்ள ஜனங்களுக்குப் போதுமான தண்ணீர் பகிர்ந்து கொடுக்க வேண்டுமானால், சிறுவாணியில் அணைகட்டி தண்ணீரைத் தேக்கி விநியோகிக்க வேண்டும். இதற்கு டாக்டர் நஞ்சப்பா காலத்திலேயே திட்டம் போடப்பட்டது. இதற்கு, சர்க்காரிடமிருந்து அதிகப்படியாக 140 லட்சம் ரூபாய் தேவை. அதோடு பீளமேட்டையும் முனிசிபாலிடியில் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. அதற்கும் தண்ணீர் கொடுப்பதற்காக சிறுவாணியில் அணை கட்ட வேண்டியது மிகவும் அவசியம் என்று

[Sri N. Marudachalam] [22nd April 1960

சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வாறு அரசாங்கத்திற்குத் தெரிவிக்கப்பட்டது. அதற்கு அரசாங்கம் "நீங்கள் சிறு சேமிப்புத் திட்டத்தின் மூலம் அதிகப்படியாக 2 கோடி ரூபாய் சேர்த்தால் உங்களுக்கு பணம் கடனாகக் கொடுக்கிறோம்" என்று பதில் கொடுத்திருக்கிறது. அந்த பதில் கொடுக்கப்பட்டதற்குப் பிறகு, அங்கே சிறு சேமிப்புத் திட்டத்தின் மூலம் 2 கோடி ரூபாய் வசூலித்துக் கொடுத்தார்கள். அதற்குப் பிறகு தூதுகோஷ்டியினர் வந்து கனம் மந்திரியைப் பேட்டி கண்டபோது, அவர் "இப்போது நாங்கள் இதற்குப் பணம் கொடுக்க முடியாது. ஏனென்றால் இதற்குப் பணம் மத்திய சர்க்காரிலிருந்து குறைவாகக் கிடைக்கிறது" என்று சொன்னார். இந்தத் திட்டம் இக் காரணத்தால் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறது என்றும் அவர் கூறியிருக்கிறார். இதை அவ்வாறு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலாவது சேர்த்து அங்குள்ள மக்களுக்கு சிறுவாணியிலிருந்து தண்ணீர் கொண்டுவந்து வினியோகிக்க ஏற்பாடு செய்ய வேண்டும்.

ஒவ்வொரு முனிசிபாலிடியிலும் குறைந்த வருமானக்காரர்களுக்கு வீடுகளை கட்டிக் கொடுக்க வேண்டுமென்று முனிசிபாலிடிகள் சர்க்காரிடம் கோருகிறார்கள். ஒவ்வொரு முனிசிபாலிடியிலும் உள்ள குறைந்த வருமானம் பெறும் சிப்பந்திகளுக்கு, அதாவது கிளார்க்குகள் போன்ற உத்தியோகஸ்தர்களுக்கு, சர்க்காரிடமிருந்து 4,000 ரூபாய் கடன் வாங்கி வீடுகள் கட்டிக் கொடுக்கப்படுகின்றன. அவர்கள் 15 ரூபாய் வீட்டு வாடகை கொடுக்க வேண்டுமென்று சர்க்கார் வாடகை நிர்ணயித்திருக்கிறது. "முனிசிபாலிடியில் ஒவ்வொரு உத்தியோகஸ்தருக்கும் 7 ரூபாய் வீட்டு வாடகைப் படி கொடுக்கப்படுகிறது. எனவே ஒவ்வொரு உத்தியோகஸ்தரிடமிருந்தும் 7 ரூபாயே வீட்டு வாடகை வாங்கிக்கொண்டு பாக்கியை விட்டு விடலாம்" என்று முனிசிபல் கவுன்சில் தீர்மானம் போட்டது. ஆனால், அவர்களிடமிருந்து 15 ரூபாயே வாடகை வாங்க வேண்டும் என்று சர்க்கார் மறுபடியும் சொல்லியிருக்கிறது. எனவே குறைந்த வருமானக்காரர்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுக்க வேண்டும், அவர்களுக்கு குடியிருப்பு வசதிகள் செய்து தர வேண்டுமென்று சர்க்கார் வாயளவில் சொன்னால் மட்டும் போதாது, நடைமுறையில் அவ்வாறு செய்துகாட்ட வேண்டும் என்று சொல்லிக்கொள்கிறேன். சேரி ஒழிப்புத் திட்டத்திற்கு கோவை முனிசிபாலிடியையும் சென்னை சர்க்கார் எடுத்துக்கொண்டிருப்பதாகத் தெரிகிறது. அங்கே சேரி ஒழிப்புத் திட்டத்தை உடனடியாக நடத்த வேண்டும். அங்குள்ள ஆயிரம் முனிசபல் தொழிலாளர்களில் சிலருக்குத் தான் வீடுகள் இருக்கின்றன, பலருக்கு வீடுகள் இல்லை. வீடில்லாதவர்கள் குடிசைகளில் குடியிருக்கிறார்கள் அவர்களுக்கு வீட்டு வசதிகள் செய்துதர வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன். அத்துடன் அவர்களுடைய சம்பளத்தையும் உயர்த்தினால்தான் அவர்கள் வாழ்க்கை வசதிகளைப் பெருக்கிக்கொள்ள முடியும்.

எங்கள் நகரத்தில் தண்ணீர் வசதி போதுமான அளவு இல்லாததைப் பொறுத்த வரையில், அரசாங்கத்திடம் பணம் இல்லாததால் அங்கே மக்களுக்குப் போதுமான அளவு தண்ணீர் விநியோகிப்பதற்கான வசதி செய்துகொடுக்க முடியவில்லை. அப்படி இருக்க, மாற்றுக் கட்சியினர் நகரசபைக்கு வந்ததால்தான் தண்ணீர் ஜாஸ்தியாகக் கிடைக்கவில்லை என்று இன்று பல இடங்களில் கூறப்படுகிறது. அங்கே தண்ணீர் போதுமான அளவு கிடைக்காததற்குக் காரணம், மாற்றுக் கட்சியினர் நகரசபைக்கு வந்தது அல்ல என்று சொல்ல விரும்புகிறேன். முன்பு இருந்தார் என்ன இடையூறு செய்யாமல் இருந்துவிட்டார், இப்போது இருக்கிறவர் என்ன இடையூறு செய்துவிட்டார் என்ற அர்த்தத்தில் ஒரு பழமொழி உண்டு. அந்த மாதிரி, நகரசபையில் முன்பு இருந்தவர்கள் என்ன முறையாக நடந்துகொண்டார்கள், நகரசபையில் இப்போது இருப்பவர்கள் என்ன தவறு செய்துவிட்டார்கள் என்று எனக்குத் தெரியவில்லை. அங்கு தண்ணீர் போதுமான அளவு கிடைக்கவில்லை என்றால், அதற்கு

22nd April 1960] [Sri N. Marudachalam]

இன்று நகராசபையில் இருப்பவர்களே மாத்திரம் பொறுப்பாளிகளாகச் சொல்லக்கூடாது. அங்கே போகிய தண்ணீர் கொண்டுவராததற்கு அந்தக் காலம் பொறுப்பாளி, முன்பு இருந்த கவுன்சிலர்களும் பொறுப்பாளிகள், இப்போதிருக்கும் கவுன்சிலர்களும் பொறுப்பாளிகள் என்று கூறிக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

*SRI M. WILLIAM: Mr. Deputy Speaker, Sir, in supporting the Demand I wish to say a few words. It is admitted on all hands that the National Highways and the State Highways are properly kept and maintained. At the same time, it is admitted by the Hon. Minister that the other district roads, the village roads and the roads formed under the Community Development Scheme, National Extension Scheme, Local Development works, etc., are in a deplorable condition and are not maintained properly. We find that a sum of Rs. 10 lakhs has been set apart for this purpose. These roads are very important roads and they are necessary for rural development and this is also admitted. So, the same importance that is given to the State Highways must also be given to these roads. Most of the roads in Vilavancode taluk which is situated on the border of the Kerala State are in a neglected condition. Those roads can be classified as district roads. They are not properly maintained by the Highways Department. There is heavy vehicle traffic and there is also bus service, both State Transport and by private concerns also. Yet, these roads are not maintained properly. They are not concreted nor black-topped. Many representations have been made to the Highways Department, but yet, the authorities concerned do not seem to take any keen interest in the matter. I wish that the Hon. Minister devotes some attention to these roads which are mostly in the Vilavankode and Kalkulam taluks.

Coming to water-supply schemes, it is stated in the note circulated by the Hon. Minister that protected water-supply schemes are very much needed. Of course, they are more necessary than dustless roads because water is more important than dustless roads. For dustless roads, a grant of 50 per cent alone is to be found by the local bodies or municipalities. The same concessions, I think, has to be extended to municipalities and panchayats which cannot afford to meet the expenses connected with water-supply schemes either from their own funds or by loan taken by the Government. We are glad to note that the Government have revised their policy in the matter of giving loans to municipalities and other local bodies and that they do not insist upon the payment of annuity before the schemes are brought into beneficial use. These are very glad things to note. At the same time, I would urge upon the Hon. Minister to see that municipalities and local bodies which cannot afford to start these schemes are afforded help by way of a fifty per cent grant as has been done in the case of provision of dustless roads.

Coming to the Kanyakumari district in particular, in regard to water-supply, I have to bring to the notice of the Hon. Minister that there is a municipal town called Kuzhithurai which is the headquarters of the Vilavankode taluk and for which a water-supply scheme was sanctioned by the erstwhile Travancore-Cochin State. The then Chief Minister of that State promised to put that scheme into execution but at that time the merger took place. Although the scheme finds a place in the Second Five-Year Plan, it has not

yet been implemented. The Government have been pleased to prepare the necessary estimates and I would request them to expedite the work so that it may be completed before the end of this Plan.

Coming to reorganisation of the district, even though the Panchayat Union Act was enacted in 1958, it has not yet been extended to the Kanyakumari district. So much so, much handicap is caused in carrying out the developmental works. If panchayat unions are brought into existence, development works can be entrusted to them and expedited. Elections have been conducted there as per the Travancore-Cochin State Rules. It is said that the election is for about two and a half years. The Panchayat Union Act should be extended to that district. No active steps have been taken to reorganise the panchayats, there is no need also to reorganise the panchayats. The existing panchayats can be retained and if there is not sufficient representation on the Panchayat Union Councils, the membership in each ward can be increased to two or three in proportion to the population of each ward and the Panchayat Union also may be given more representation from the Panchayat.

There are one or two other points which I have to state at this juncture. There are panchayats which have lot of money and they are not given permission to spend the same. Technical or administrative sanction is not given to development programmes. Estimates are not prepared in time. This retards the progress of villages. Some attention may be bestowed on this question by the Hon. Minister.

Then in the grant of markets, there is one thing which I want to refer to. As per the Travancore-Cochin State Rules, markets are not permitted within a distance of two miles. But certain private parties apply for private markets and these are permitted irrespective of the Rules and the effect of it is that the income of the panchayats is adversely affected. Some attention to this matter is also necessary. To-day I got a letter from Palukal Panchayat where there is a daily market which has been auctioned for 12,000 rupees. It is on the border of the Kerala State. The Kerala State authorities want to open another market on their side within a distance of two or three furlongs from this place. On the 23rd of last month, there was a conference and it has been decided that this market should be converted into a market which has to be held once a week or two days in a week. That affects the income of the panchayat. As per the Travancore-Cochin State Rules, markets within a distance of two miles in adjoining panchayats should not be allowed. I am sure, our Minister will take keen interest in this matter and see that the Kerala Government do not open any market within a distance of two miles from this market. With these observations, I resume my seat.

Sri K. MARAPPA GOUNDER: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் இந்தச் சபையிலே சமர்ப்பித்திருக்கும் மானியக் கோரிக்கையை ஆதரித்துச் சில வார்த்தைகள் பேச ஆசைப்படுகிறேன். ரோடுகளை தேசீயப் பெருஞ்சாலைகள், மாநிலப் பெருஞ்சாலைகள், மாவட்டப் பெருஞ்சாலைகள், கிராமச் சாலைகள் என்று இப்படியெல்லாம் பிரித்திருக்கிறார்கள்.

22nd April 1960] [Sri K. Marappa Gounder]

குறிப்பாக கிராமச் சாலைகள் மிகவும் சீர்கேடான நிலைமையில் இருந்து வருகின்றன என்ற விஷயம் எல்லோரும் அறிந்ததே. கிராமப் புறங்களில் ரோடுகள் மிகவும் சீர்கேடு அடைந்திருக்கின்றன. கிராம ரோடுகள் ஜில்லா போர்டின் கீழ் இருந்து வந்தன. ஜில்லா போர்டின் வருமானம் குறிப்பாக பெரிய ரோடுகள், பள்ளிக்கூடங்கள் இவைகளுக்காகவே செலவிடப்பட்டதனால், கிராம ரோடுகளைப் பொறுத்த வரையில் சரியாக கவனிக்கப்படாமலே இருந்துவிட்டன. கிராமத்திலிருந்து ஒரு நல்ல ரோடுக்கு வர வேண்டுமானால் இட்டேரிகள்தான் இருக்கும். மண் ரோடுகூட இருக்காது. கிராமங்களிலிருந்து உணவுப் பொருள்களையும், விவசாயத்திற்கு வேண்டிய எரு முதலியவை எடுத்துப் போவதற்கும் விளைப் பொருள்களை மார்க்கெட்டுக்குக் கொண்டுவருவதற்கும் கிராமப் புறங்களில் ரோடு கிடையாது. தலைச் சுமையாகத்தான் கொண்டு வருகிறார்கள்.

குறிப்பாக அவனாசி தாலுகாவை எடுத்துக்கொண்டால், அங்கே 70, 80 கிராமங்கள் இருக்கின்றன. 1 p.m.

அந்தத் தாலூகாவில் கோயம்புத்தூரிலிருந்து சத்தியமங்கலம் போவதற்கு ஒரு பெரிய ரோடு இருக்கிறது. கோயம்புத்தூரிலிருந்து ஈரோடு போவதற்கு ஒரு தேசிய ரோடு நல்ல முறையில் பாதுகாக்கப்பட்டிருக்கிறது, தார் போடப்பட்டு, சிமெண்டு போடப்பட்டு இருந்துவருகிறது. ஆனால் 72 கிராமங்களை எடுத்துக்கொண்டால், எந்த கிராமத்திலும் கப்பி ரோடு இருக்கிறதா என்றால், கிடையவே கிடையாது என்று உறுதியாக சொல்ல முடியும். சில கிராமங்களில் இட்டேரிகள் கரடுமுரடாக முள்ளும், கல்லும் கலந்த தளங்களாக இருந்து வருகின்றன. கிராமங்களில் இரவு வேளைகளில் போவது மிகவும் கஷ்டமாக இருக்கும். விவசாய கூலி ஆட்கள் தங்களுடைய விவசாய வேலையிலிருந்து தங்களுடைய வீட்டிற்கு போவதற்கு இருட்டில் தான் போக முடியும். அந்த சந்தர்ப்பத்தில் அந்த ரோடுகளில் போவது மிகவும் கஷ்டமாக இருந்து வருகிறது. கிராம ரோடுகளை சரியான முறையில் நிர்வகித்து நல்ல முறையில் செப்பனிட வேண்டுமென்றால், இந்த மான்யத்திற்கு ஒதுக்கியிருக்கிற தொகை பூராவும் செலவழித்தால்கூட போதாது. கிராம மக்கள் நகர மக்கள் வாழ்வின் ஒரு தரத்தில் வாழவேண்டும் என்றால், முதலில் கிராமங்களுக்கு நல்ல முறையில் ரோடு வசதிகள் செய்துகொடுத்தாக வேண்டும். கிராமங்களில் போதுமான ரோடுகள் வசதியில்லை என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். கிராம ரோடுகளை நல்ல முறையில் அமைக்கவேண்டுமென்றால் இந்த மான்யத்திற்கு கோரியிருக்கிற ரூபாய் பூராவும் ரோடு வசதி செய்து கொடுப்பதற்கே செலவழிக்கவேண்டும்.

இது தவிர, எந்த கிராமத்தை எடுத்துக்கொண்டாலும் குடி தண்ணீர் வசதி மிகவும் குறைவு. ஏனென்றால் அங்கெல்லாம் பழங்காலத்தில் வெட்டப்பட்ட கிணறுகளில் படியின் வழியாக சென்று தான் தண்ணீர் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். பாதுகாக்கப்பட்ட குடி தண்ணீர் வசதி மிகவும் குறைவு. இப்பொழுது அவினாசி பிர்கா வட்டார அபிவிருத்தி திட்டத்தின் கீழ் சேர்க்கப்பட்டிருக்கிறது. இருந்தாலும்கூட, இந்தப் பகுதியில் கூட குடி தண்ணீர் வசதி மிகவும் குறைவாக இருந்து வருகிறது. இப்பொழுது ஜில்லா போர்டுகளுக்கு பதிலாக கிராம பஞ்சாயத்துகள்மூலம் குடி தண்ணீர் வசதி, ரோடு வசதி, மற்றும் சுகாதார வசதி போன்ற வசதிகளையெல்லாம் செய்ய அரசாங்கம் ஏற்பாடு செய்திருக்கிறது. அதன் காரணமாக கிராம கிஸ்து வசூல் மற்றவைகளிலிருந்து கிராம பஞ்சாயத்துகளுக்காக பணம் ஒதுக்கியிருக்கிறார்கள். அநேகமாக ஒவ்வொரு கிராமத்திற்கும் பஞ்சாயத்து ஏற்பாடு இருந்து வருகிறது. அந்த பஞ்சாயத்திலுள்ள மெம்பர்கள், தலைவர்கள் எந்த வகையில் எவ்வளவு ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது, எந்த வேலை செய்யவேண்டும் என்பதைக் கூட அவர்கள் அறிந்து செய்யாமல் இருந்து வருவது மிகவும் வருந்தத்தக்க விஷயம். சில கிராமங்களில் ரோடு அல்லது சுகாதாரம் போன்ற வசதிகள் செய்து கொடுப்பதற்கு டெப்யூடி பஞ்சாயத்து ஆபீஸர்கள் இருக்கிறார்கள். அவர்கள்

அந்த கிராம பஞ்சாயத்திலுள்ளவர்களை ஓரளவுக்கு சரிப்படுத்தி பஞ்சாயத்து போர்டில இருக்கும் பணத்தை ஓரளவுக்கு செலவு செய்வதற்கு ஏற்பாடுகள் செய்துவிட்டு, நல்ல முறையில் காரியங்களைச் செய்யாமல் அந்தப் பணத்தை செலவழிப்பதற்கு என்ன செய்ய வேண்டுமோ அந்த அளவுக்கு ரோடு மற்ற ஏதாவது ஒரு காரியத்தைச் செய்து பணத்தை மட்டும் செலவழித்துவிடுகிறார்கள். அந்த முறை இல்லாமல் டெப்யுடி பஞ்சாயத்து ஆபஸர்களைவிட, இன்னும் சில என்ஜினியர்களைப் போட்டு அவர்கள் செய்யும் வேலையை மேற்பார்த்து அந்தப் பணத்தைச் செலவழிக்க அரசாங்கம் அவசியம் ஏற்பாடு செய்யவேண்டுமென்று தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

அதுமட்டுமல்லாமல், இந்தத் திட்டங்களில் பள்ளிகள் கட்டுவதும் அம்மாதிரி தான்; அதுவும் தவிர, கிராமப்புரங்களில் விவசாயிகளுக்கு விவசாயத்திற்கு வேண்டிய காரியங்களை செய்ய இதன் மூலம் ஏற்பாடு செய்யவேண்டும். இந்த மான்யக் கோரிக்கையை ஆதரித்து என்னுடைய உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

DEPUTY SPEAKER: Now, the hon. Member Sri Authimoolam will speak. I hope the hon. Member will finish his speech in five minutes.

*SRI D. S. AUTHIMCOLAM: மிஸ்டர் டெப்யூடி ஸ்பீக்கர், ஸார், இந்த மான்யக் கோரிக்கை ரொம்பவும் ஏமாற்றமான முறையில் அமைந்திருக்கிறது. ஒரு கோடி எழுபத்து இரண்டு லக்ஷம் (ரூ. 1,72,00,000) அளவுக்குத் தான் இங்கு மான்யம் கோரப்படுகிறது. அதுவும் முக்கியமாக கிராமங்களிலுள்ள ரோடுகள் விஷயமாக பராமரிப்புக்கு ஒரு தொகையும் ஒதுக்கப்படவில்லை. அதாவது (Maintenance) பராமரிப்புக்கு என்று தொகை ஒதுக்கப்படவில்லை. இந்த நிலைமையை பார்க்கிறபோது, இது நமது தேசத்திலுள்ள கிராமவாசிகளின் தூர திருஷ்டம் தான் என்று சொல்லவேண்டியிருக்கிறது. ஒரு பக்கம் "ஸெல்ப்-போஸ்டிங்காக" (self boasting) எப்படிப்பார்த்தாலும் சென்னை மகாணம் முன் அணியில் நிற்கிறது, என்று மின்சார இலாகா மந்திரி சொல்லுகிறார். அடுத்து ஒரு மந்திரி வந்து அதே மாதிரி சொல்லுகிறார். அதுவும் தவிர இந்த அறிக்கையைப் பார்த்தாலும் ரொம்ப பிரமாதமாகத் தான் இருக்கிறது. 'Madras State can well be proud of having a well knit system of roads in which the roads maintained by the local bodies play no insignificant part' என்று பிரமாதமாக முதலிலே சொல்லப்பட்டிருக்கிறது. இன்னொரு பக்கத்தில் திருப்பி பார்க்கிறபொழுது "ஆறுஸ்டாக" ஒத்துக்கொண்ட மாதிரி 'The condition of roads formed under National Extension Service and Local and Development programmes is deplorable.' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இன்னொரு பக்கத்தில் 'To begin with the Government have proposed to incur an expenditure of Rs. 10 lakhs for the purpose in 1960—61.' என்று சொல்லப்பட்டிருக்கிறது. முதலில் 10 லட்ச ரூபாய் இதற்காக செலவழிக்க உத்தேசித்திருப்பதாக சொல்லப்படுகிறது. ரோடுகளை தாங்களே பராமரிக்கப்போவதாக சொல்லப்படுகிறது. பத்து வருஷ காலமாக ஜில்லா போர்டு ரோடுகள் கவனிக்கப்படவில்லை. பல கோடி ரூபாய் அளவில் முதல் ஐந்தாண்டுத் திட்டம், இரண்டாவது ஐந்தாண்டு திட்டம் என்று போடக்கூடிய காலத்தில் கூட ஜில்லா போர்டு ரோடுகள் கவனிக்கப்படவில்லை. இதற்கு முன்பு வெள்ளைக்காரர்கள் இந்த நாட்டிலே அரசாட்சி செய்தபொழுது வருஷத்தில் 3 லட்சம், 4 லட்சம் ரூபாய் ஜில்லா போர்டுகளுக்கு என்று ஒதுக்கி உதவி செய்துவந்தார்கள். அதன் மூலம் 1,000 2,000 மைல் நீளமுள்ள ஜில்லா போர்டு ரோடுகள் நன்றாக பராமரிக்கப்பட்டு வந்தன. இந்தக் காலத்தில் எல்லா ரோடுகளும் அழிந்து கொண்டு வருகின்றன. அதை நீங்கள் கண்கூடாக பார்த்தும் இருக்கிறீர்கள். நீங்கள் கிராண்டு கொடுக்காவிட்டாலும், உங்கள் கையில் பணம் இல்லையென்றாலும், மத்திய சர்க்காரிடம் சொல்லி ஏராளமான ரூபாயை வாங்கி கிராம ரோடுகளை

22nd April 1960] [Sri D. S. Authimoolam]

பராமரிப்பதற்கு வசதி செய்து கொடுத்திருக்கவேண்டும். மொத்தத்தில் 10 லட்ச ரூபாய் என்று சொன்னால், ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஒரு லட்ச ரூபாய் வருகிறது. லட்ச ரூபாயை வைத்துக் கொண்டு 50 அல்லது 100 ரோடுகளைத்தான் வைத்து சரியாக மராமத்து செய்ய முடியும். அதுகூட கஷ்டமாக இருக்கும். ஒவ்வொரு ஜில்லாவிலும் 1,500 மைல் நீளமுள்ள ரோடுகள் இருக்கின்றன. கோவை, சேலம் போன்ற ஜில்லாக்களில் 3,000 மைல் நீளமுள்ள ரோடுகள் இருக்கின்றன. கிராமங்களில், கிராம ரோடுகளில் நீங்கள் சரியாக கவனம் செலுத்த வில்லை. கிராமவாசிகளை ரொம்பவும் அலட்சியப்படுத்தியிருக்கிறீர்கள். அதற்கு ஒரு அத்தாட்சி ஒவ்வொரு ஜில்லா போர்டுக்கும் ரூ. 8,000 மான்யம் கொடுக்கிறோம் என்று உங்களுடைய அறிக்கையில் கண்டிருக்கிறது. ரூ. 8,000 என்று சொன்னால், கிராம மக்களுடைய ரோடுகள் பற்றி எவ்வளவு அக்கறையாக சர்க்கார் கவனித்திருக்கிறார்கள் என்பதை வருத்தத்தோடு இங்கே குறிப்பிட விரும்புகிறேன். எண்பதுகோடி ரூபாய் வரவு செலவு செய்யும் ஒரு திட்டத்தில் ரோடுகளுக்காகவும் மற்றும் கிராமங்களுக்கு வேண்டிய வசதிகள் செய்து கொடுப்பதற்காகவும் 10 லட்சம் ரூபாய் ஒதுக்கியிருக்கிறோம் என்று பெருமையாக சொல்லுகிறீர்கள். சென்ற வருஷம் குடி தண்ணீருக்காக கிட்டத்தட்ட 17 லட்ச ரூபாய் ஒதுக்கியிருந்தோம். இந்த வருடம் கூட 7 லட்ச ரூபாய் ஒதுக்கியிருக்கிறோம் என்று ஒரு குறிப்பில் எழுதியிருக்கிறீர்கள். சென்ற வருஷம் நாங்கள் 144 லட்சம் ரூபாய் கேட்டோம், இந்த வருடம் கூட 25 லட்சம் ரூபாய் கேட்டிருக்கிறோம் என்று பெருமையாக சொல்லிக்கொள்ளுகிறீர்கள். எப்படிப் பார்த்தாலும் மற்ற மாகாணங்களை விட முன் அணியில் நிற்கிறோம் என்று சொல்லிக் கொள்ளுகிறீர்களா ? அதற்கு உங்கள் திறமை தான் காரணம் என்று நினைக்கிறீர்களா? இல்லை. மற்ற மாகாணங்களைவிட சென்னை ராஜ்யம் முன் அணியில் நிற்பதற்கு நல்ல அரசாங்க உத்யோகஸ்தர்களுடைய பரம்பரை, வெள்ளைக்காரர்களுடைய நல்ல சட்டம் இன்னும் இங்கு இருப்பது தான் காரணம். மந்திரிகள் இல்லாத காலத்திலும் (Advisers' Regime) "அட்வைசரி ரெஜிம்" யுத்த காலத்தில் நடந்த பொழுது கூட தமிழ் நாட்டினுடைய நிர்வாகம் இதை விட நன்றாகத்தான் இருந்தது. ஒவ்வொரு ஜில்லா போர்டுக்கும், இரண்டு, மூன்று, லட்ச ரூபாய் கிராண்டு கொடுத்து, ரோட் மெயின்டனென்ஸ் செய்து எல்லா ரோடுகளையும் நல்ல முறையிலே வைக்க வேண்டும். ஜில்லா போர்டுகளுக்கும், ஸ்தல ஸ்தாபனங்களுக்கும், உபரியாக மானியங்களைக் கொடுத்து, கிராமாந்தரப்பகுதிகளில் நல்ல ரோடுகளாக வைக்க வேண்டும். இவர்கள் சொல்லும் இந்த ரூ. 8 ஆயிரம் என்பதிலிருந்து, இந்த சென்னை ராஜ்ய சர்க்காரின் மனப்பான்மை கிராமாந்திரத்தை பொருத்தவரை எப்படியிருக்கிறது என்பதைக் காட்டுகிறது. இதை அதிகப்படுத்தி நல்ல முறையிலே செய்யாவிட்டால், நான் லட்சம் பிட் நோட்டீசுகள் அச்சு போட்டு விநியோகம் செய்யத் தயாராவேன் என்பதைச் சொல்லிக் கொள்கிறேன். இந்த மானியம் ஆறு கோடி, எழு கோடி என்று இருக்க வேண்டியதற்குப் பதிலாக, ஒன்றேமுக்கால் கோடி இந்த ரோடுகளுக்கு என்றால், நிலைமை மிகக் கேவலம் என்பதைச் சொல்லி என் பேச்சை முடிக்கிறேன். வணக்கம்.

* THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : மிஸ்டர் டெபுடி ஸ்பீக்கர், ஸார், இன்று இங்கு அநேக அங்கத்தினர்கள் பேசும்போது, இந்த மானியக் கோரிக்கையில் அதிகப்படிப் பணம் வேண்டும், இருக்கும் பணம் போதாது, இதற்குக் கூடுதல் பணத்தை ஒதுக்கவேண்டும், செலவினங்கள் அதிகமாக இருக்கிறது, என்றெல்லாம் கூறினார்கள். உண்மையிலே ஒப்புக் கொள்ளக்கூடிய விஷயம்தான். ஆனாலும் நம் நாட்டு நிதி நிலைமையில் எவ்வளவு செலவிட முடியும் என்பதை கவனித்துப் பார்க்க வேண்டும். ஸ்ரீ ஆதிமூலம் சொன்னார்கள், ரோடுகளின் நிலை மோசமாக இருக்கிறது எல்லா ரோடுகளும் அழிந்து கொண்டு இருக்கின்றது என்று. அப்படிப் பொதுவாகப் பேசி வருத்தப்படுவது தேவையில்லை. ஏனென்றால் கழிந்த வருடத்தை விட கூடுதலாகத் தண்ணீர் திட்டத்திற்கும், ரோடுகளுக்கும் பணம் ஒதுக்கும் வாய்ப்பு கிடைத்தமைக்கு நான் இன்னும்

[Srimathi Lourdhammal Simon] [22nd April 1960

மகிழ்ச்சியைத் தெரிவிக்கிறேன். இருக்கும் நிலைமையில், கூடுமானவரையில் செய்திருப்பதற்கு மகிழ்ச்சியும், பெருமிதமும் அடையாமல் இருக்க முடியாது. உண்மையிலேயே, கூடுதலாக இன்னும் தண்ணீர் வசதிக்காகவும், ரோடு வசதிக்காகவும் ஏற்பாடு செய்யலாம். ஆனால், இருக்கும் நிலைமையில், இவ்வளவாவது செய்ய முடிந்ததற்குப் பெருமைப்படவேண்டியதுதான்.

திரு. துரைசாமி ரெட்டியார் டிஸ்டிரிக் போர்ட் கலைக்கப்பட்டதன் நோக்கம் சிறிய ஸ்தாபனங்களை வைத்துத் திறமையாக நடத்த வேண்டும் என்றுதான் சொன்னார்கள். வாஸ்தவம். உண்மையாக அவ்விதம் சிறிய ஸ்தாபனங்களாக பஞ்சாயத்துக்கள் அமைக்க வேண்டும். சிறிய ஸ்தாபனனங்களாக இயங்க வேண்டும். அப்படிப்பட்ட கிராமஸ்தாபனங்கள் மூலமாக வேலை செய்யும்போது. கிராம மக்கள் 50 சதமானம் இந்த வேலைகளுக்கு கொடுக்க வேண்டுமென்று குறிப்பிட்டால் அது ஒன்றும் வருந்தத்தக்க விஷயம் அல்ல. ஏதோ இருக்கும் நிலையில், பொது மக்கள் ஆதரவு கொடுத்து அவர்களும் தங்கள் பொறுப்பை ஏற்று நடத்தவேண்டும் என்பதுதான் நோக்கம். வேலைகளுக்கு 50 சதமானம் என்பதில் பலதரப்பட்ட வேலைகளுக்கு பல நிரக்கு மானிய உதவிகள் கொடுக்கப்படுகிறது. இதன் நோக்கம் பொது மக்கள், முன்னேற்ற வேலைகளுக்கு ஆதரவு அளித்து அதில் அக்கரை காட்டவேண்டும் என்பது தான்.

கனம் சுப்பைய்யா முதலியார் குடிதண்ணீர் கொடுக்க வேண்டியது சர்க்காரின் கடமை, அரசாங்கமே முழுப் பொறுப்பையும் ஏற்று நடத்த வேண்டும் என்று சொன்னார்கள். சரிதான். வரவேற்கத்தக்கது. ஆனால் சர்க்காரின் நிலைமையைக் கவனித்து, அரசாங்கத்தில் இப்பொழுது எவ்வாறு குடி தண்ணீருக்கு முழுப் பொறுப்பு ஏற்று நடத்த முடியும் என்று பார்க்க வேண்டும். ஒரு ஊரில், குடி தண்ணீர், ரோடுகள் என்று எடுப்பது சாத்தியமில்லை. எந்தெந்த இடத்தில் ரோடுகள் தேவையோ குடி தண்ணீர் தேவைப்படுகிறதோ, அங்கெல்லாம் உதவி கொடுக்கிறோம். அங்கெல்லாம் அரசாங்கம் பொறுப்பு எடுத்து, தகுந்த கவனம் செலுத்தி வருகிறது. இப்பொழுது கொடுத்திருக்கும் அறிக்கைப்படி, 50 முனிசிபாலிடிகளும், 14 மேஜர் பஞ்சாயத்துக்களும், இந்த இரண்டாவது திட்ட கடைசி வருஷத்தில் குடி தண்ணீர் வசதிகள் ஏற்படும் என்று எதிர் பார்க்கப்படுகிறது.

ஸ்ரீமதி ராஜாத்தி குஞ்சிதபாதம் பலபல வேலைகளைப் பற்றிச் சொன்னார்கள். சுலோசன முதலியார் பாலத்தைப்பற்றிச் சொன்னார்கள். அது பழைய பாலம். அதைச் சீர்திருத்திருத்துவதில் பல சிக்கல்கள் இருக்கின்றன. அது ஆலோசித்து செய்ய வேண்டிய ஒரு வேலை. தாமிர பரணிமேல் ஒரு பாலம் கட்ட வேண்டும் என்றும் சொன்னார்கள் அதைப் பற்றி அரசாங்கமும் இப்பொழுது, ஆராய்ந்து கொண்டிருக்கிறது ; பரிசீலனை நடத்தி வருகிறது. அவ்வாறு எந்த இடங்களில் மிகத் தேவையான முக்கியமான வேலைகள் இருக்கின்றனவோ அதைக் கவனித்து வருகிறோம்.

திரு. அன்பழகன் பேசும்போது, உள்ளாட்சித் துறையைப் பற்றி விவாதிக்கத் தனி வசதி, தகுந்த சமயம், வேண்டும் என்று குறிப்பிட்டார்கள். அது பரிசீலனை செய்து பார்க்க வேண்டிய விஷயம். ஒவ்வொரு கிராமங்களிலும், கொடுக்கும் தொகையான 40 நயா பைசா, போதாது என்றார்கள். அரசாங்க கமிட்டி இந்த விஷயத்தை மிகவும் ஆலோசித்து தான் இந்த முடிவுக்கு வந்தார்கள். அரசாங்கத்திற்கு அதிக வருமானம் கிடைக்குமானால், அதை அதிகப்படுத்துவதுபற்றி ஆலோசிக்கலாம். நகர சபையைப்பற்றியும் அதற்கு அரசாங்கம் உதவி அளிக்க வேண்டும் என்றும் கூறினார்கள். அதே சமயத்தில், பொது மக்களும், இந்த சீரமைப்பில் பொறுப்பு ஏற்றுக் கொள்ளவேண்டும். இன்று நிர்வாகத்தில் குறைகள் இருந்தால், அதற்குப் பரிகாரம் தேட எங்கெல்லாம் முடியுமோ, அதையெல்லாம் கவனித்து, அரசாங்கம், பரிகாரங்களைத் தேடுகிறது. இங்கு

**22nd April 1960] [Srimathi Lourdhammal Simon]**

இன்னும் கட்சிகளைக் அடிப்படையாகக் கொண்டு குறைகள் கூறுவதை விட, மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கைகளை ஏற்று நடத்துவதில் நாம் எல்லோரும் கவனம் செலுத்துவது நலம் என்று கூறிக் கொள்ள விரும்பு கிறேன்.

வருவாயைப் பெருக்குவதற்கு வரி வசதிகளையும், பஸ் வண்டிகளிலிருந்து கார்ப்பொரேஷனுக்கு உதவி அளிக்க வேண்டும் என்றும், டெர்மினல் டாக்ஸ் கொண்டு வரவேண்டும் என்றும் கூறினார்கள். அந்த விஷயங் களெல்லாம் அரசாங்கத்தின் பரிசீலனையில் இருக்கிறது. டெர்மினல் டாக்ஸ் சம்பந்தமாக இன்று நம் அராசாங்கம் ஒரு முடிவுக்கு வரமுடியாது; மத்திய சர்க்காரின் அனுமதியைக் கேட்டு, அதன் பிறகே செய்ய வேண்டும். அந்த அனுமதியைக் கேட்டிருக்கிறோம்.

ஸ்ரீ வில்லியம் அவர்கள் பேசும்போது, விசேஷமாக, விளவங்கோடு தாலூக்காவைப் பற்றிச் சொன்னது வரவேற்கத்தக்கது. அங்கத்தினர் அவர்கள் இந்த சபையில் எடுத்துக் கூறின தகவல்களுக்கும், அந்த இடங்களிலுள்ள பிரச்னைகளைப் பற்றி கூறியதற்கும் மிகவும் நன்றி. ஆனால் இதே முறையில், இதற்கு முன்னால் இந்தத் தகவல்களைத் தர தவறினாலும், இனிமேலாவது இவற்றைப்பற்றி தகுந்த முறையில் அரசாங்கத் துக்கு அறிவித்து பரிகாரம் தேடினால், அவற்றைப் பரிசீலனை செய்து வேண்டிய உதவி செய்ய முயற்சிப்பேன் என்று உறுதி சொல்ல விரும்பு கிறேன். 1958-வது ஆண்டு மதராஸ் பஞ்சாயத்து ஆக்ட் இணைக்கப்பட்ட பிரதேசங்களில் இன்னும் அமுலுக்கு வரவில்லை. ஆனால் அதுவும் வெகு சீக்கிரம் ஏற்படும். 1961-ம் ஆண்டு, அக்டோபர் மாதம் 2-ம் தேதிக்கு முன் இது நிறைவேற்றப்படும் என்பதை இந்த சமயத்தில் கூறிக் கொள்ளு கிறேன். நாளுக்கு நாள் போக்கு வரத்து அதிகப்படுவதின் காரணமாக வும், வண்டிகளும் பெருகிக் கொண்டு போவதின் காரணமாகவும் ரோடுகளின் தேவை அதிகப்படுகிறது. தேவைப்படுவது மட்டுமல்ல. பராமரிப்பில் சிக்கல்கள் அதிமாகிறது. இந்த நிலையில், அரசாங்கம் நன்றாக பரிசீலனை செய்து, தகுந்த உதவி அளிக்க ஏற்பாடு செய்து வருகிறது. இந்த திட்ட ஆண்டுகளில், 5,000 மைல் ரோடுகள் எடுக்க வேண்டும் என்றும், 500 பேர்களுக்கு மேல் இருக்கும் கிராமங்களை இணைக்கும் திட்டம் அரசாங்கத்தினிடம் இருக்கிறது. இதில் 1,700 மைல் இரண்டாவது திட்டத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறது. கட்மோஷன் கொடுத்த அங்கத்தினர் நார்த் ஆற்காடு பற்றியும், அங்கே ரோடு பராமரிப்புப் பற்றியும் கூறினார்கள். இந்த இரண்டாவது திட்டத்தில், 336 மைல்கள். அதாவது, மொத்தமான ரோடுகளில். ஐந்தில் ஒரு பாகம் அந்த டிஸ் ட்ரிக்டுக்கே போகிறது. ஆகவே, அந்தப் பிரச்னை ஒரு விதத்தில் குறையும் என்று நினைக்கிறேன்.

1960-61-ல் நான்கு லட்சத்து பதினாலாயிரத்து அறு நூற்று எண்பத்தி ஏழு ரூபாய் மானியமாக அளிக்க அரசாங்கம் உத்தேசித்திருக்கிறார்கள். சமுதாய நல திட்ட வழியாகவும், தேசிய விஸ்தரிப்புத் திட்ட வழியாகவும் பஞ்சாயத்து கிராம போக்குவரத்து வசதிகளுக்கு மானிய உதவி செய்திருக்கிறார்கள். இது எல்லோருக்கும் தெரிந்ததே. இவைகள் எல்லாம் ரோடுகள் வசதி களுக்காகத்தான். அதன் மூலம் அநேக ரோடுகளைச் செப்பனிடலாம். இப்போதுள்ள ரோடுகள் எல்லாம் டிஸ்ட்ரிக்ட் போர்டினிடம் இருந்த ரோடுகள் தான். அதே ரோடுகள் தான் இப்பொழுது கிராம ரோடுகளாக இருக்கின்றன. ஆகவே இப்பொழுது கிராமங்களுக்கு என்று தனிப்பட்ட ரோடுகள் அமைக்க வேண்டிய அவசியம் இல்லை. இப்பொழுது கொடுப் பதற்கு ஏற்பாடாகி இருக்கும் மானிய உதவி கிராம ரோடுகளுக்கு போது மானது என்று கருதப்படுகின்றன. ஆகவே கிராமப்புற ரோடுகளை யெல் லாம் சிறந்த முறையில் வைத்துக் கொள்வதற்கு கவனம் செலுத்தப்படும். கவனமும் செலுத்திக் கொண்டு வருகிறார்கள்.

இன்னும் ஒன்றை சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். குடி தண்ணீர் நிலைமையைப்பற்றி அநேகம் அங்கத்தினர்கள் சொன்னார்கள். தண்ணீர் வெளியே போகாமல் பார்த்துக் கொள்ள வேண்டியதாக இருக்கிறது.

[Srimathi Lourdhammal Simon] [22nd April 1960

இப்பொழுது நமக்குப் போதுமான அளவில் தண்ணீர் இல்லாமல் இருக்கிறது. தண்ணீர் வசதி இல்லாத காரணத்தால் எல்லா முனிசிபாலிட்டிகளும் தண்ணீர் வேண்டும் என்று சொல்லும் காரணத்தால் இந்த வருஷம் அதாவது இரண்டாவது திட்ட காலத்தில் கடைசி வருஷத்தில் ஐம்பது முனிசிபாலிட்டிகளுக்கும் 14 மேஜர் பஞ்சாயத்துகளுக்கும் குடி தண்ணீர் வசதி ஏற்படும் என்று எதிர் பார்க்கின்றோம். இரண்டாவது திட்ட காலத்தில் ஒதுக்கப்பட்ட 505 லட்சம் ரூபாய் போதுமான அளவில் இல்லாத காரணத்தால் 873 லட்சம் ரூபாயாக உயர்த்த வேண்டும் என்று மத்திய அரசாங்கத்தினிடம் கேட்ட கோரிக்கை நிராகரிக்கப்பட்டதன் காரணத்தால் அனுமதிக்கப்பட்ட தொகையை வைத்துத்தான் வேலைகளைக் கவனிக்க முடியும்.

கனம் அங்கத்தினர்கள் இந்த சந்தர்ப்பத்தில் எடுத்துப் பேசிய அநேகம் குறைகளைப் பற்றி அரசாங்கம் கவனத்தில் எடுத்து கொள்ளும். கனம் அங்கத்தினர்கள் கொடுத்த ஆலோசனைகளை அரசாங்கம் கவனத்தில் எடுத்துக் கொள்ளும். கனம் அங்கத்தினர்கள் நல்ல ஆலோசனைகளைச் சொல்லியதற்காக அவர்களுக்கு நன்றி செலுத்துகிறது. நானும் நன்றியை செலுத்துகிறேன். ஸ்தல ஸ்தாபனங்களைப் பொறுத்த அளவில் எவ்வளவோ பிரச்னைகள் இருக்கின்றன. அவைகளையெல்லாம் நிறைவேற்றுவதாக இருந்தால் எவ்வளவோ கஷ்டமாக இருக்கிறது. ஒன்றுக்கு ஒன்று பின்னி இருக்கிறது. அதனால் திட்ட வட்டமான வேலைகளை உடனடியாகச் செய்ய முடியவில்லை. இருந்தாலும் எவ்வளவோ பொறுப்புடன் அவைகள் எல்லாம் கவனிக்கப்பட்டுதான் வருகின்றன. எவ்வளவு தூரம் சிபாரிசுகளுக்கு இடம் கொடுக்க முடியுமோ அந்த அளவில் கொடுக்கப்பட்டு வருகிறது. ஆகவே எல்லாவற்றிற்கும் கவனம் செலுத்தப்படும் என்று இந்த சபையில் கூறிக் கொள்வதுடன் இந்த மானியக் கோரிக்கையை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று கனம் அங்கத்தினர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

DEPUTY SPEAKER : Is the hon. Member Sri Kothandaraman withdrawing his cut motion ?

SRI V. K. KOTHANDARAMAN : I am pressing it, Sir.

DEPUTY SPEAKER : The question is—

'That the allotment of Rs. 1,72,03,000 under Demand XXVIII—Civil Works—Grants-in-Aid be reduced by Rs. 100'.

The cut motion was put and lost.

DEPUTY SPEAKER: The question is—

'That the Government be granted a sum not exceeding Rs. 1,72,03,000 under Demand XXVIII—Civil Works—Grants-in-Aid'.

The Demand was put and carried and the Grant was made.

DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again at 8-30 a.m. on Monday, the 25th April 1960.

The House then adjourned.

## IV.- PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### *A.—Statutory Rules and Orders.*

Nil.

### *B.—Reports, Notifications and other papers.*

• 77. *Annual Report of the Madras Public Service Commission*, 1958–59.

• 78. *The Report of the Select Committee on the Madras City Tenants' Protection (Amendment) Bill*, 1959.